# செந்தமிழ்ச் செல்வி

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

இரண்டாவது பரல்

சிலம்பு-ரு০] வள்ளுவர் ஆண்டு உ০০௬, புரட்டாசி (Oct 75) [பரல்-உ

# ‘செந்தமிழ்ச் செல்வி’



---

## உள்ளுறை

10.9.75

# அரிமா சங்கம்

நடத்திய

'கண் பாதுகாப்பு' கருத்தரங்கில்

## 'கண் மருத்துவம்' நூல் வெளியிடல்




Lt. Col. டாக்டர் வி. ரங்காச்சாரி அவர்கள்
நூலினைப் பாராட்டிப் பேசி
டாக்டர் ராஜேந்திர T. வியாஸ், எம்.ஏ., பிஎச். டி., எல்எல்.பி.,
அவர்களிடம் முதல் படியினை வழங்குதல்

நாள்: 28—9—1975

இடம்: பால்ம்க்ரோவ் விடுதி, சென்னை-34.

# மறைமலையடிகளார் நூல் நிலையத்தில்



29-10-65 இல் தலைவர் காமராசர் அவர்கள் மறைமலையடிகளார் நூல் நிலையத்திற்கு வருகைதந்து நூல்களைப் பார்வையிடல் கழக ஆட்சியாளரும் உடன் இருத்தல்.



தலைவர் காமராசர் அவர்களின் 62ஆவது பிறந்த நாளன்று, (17–7–'64) கழக ஆட்சியாளர் அவர்கள் திரு காமராசர் அவர்களிடம் திருக்குறள் தெளிவுரை நூல்களில் 62 படிகளைக் அன்பளிப்பாக வழங்கி மகிழ்தல்.

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௦ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦சு, புரட்டாசி அக்டோபர் 1975 | பரல் உ |
|---|---|---|

## செந்தமிழ்ச் செல்வி பொன்விழா ஆண்டில் 'எங்குந் தமிழ் எதிலும் தமிழ்' என்ற மறைத்திரு மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை முற்றிலும் நிறைவேறப் பணிசெய்வோம்

முதற்கண் தமிழ்நாட்டிலுள்ள புகைவண்டி நிலையப் பெயர்களை எடுத்துக் கொள்வோம். அண்மையில் செய்தி இதழ்களிற் கண்ட ஒரு நல்ல செய்தியைத் தெரிந்து கொண்டு மேலுஞ் செய்ய வேண்டியவற்றைக் கவனிப்போம்.

தமிழ்நாட்டிலுள்ள புகைவண்டி நிலையங்களுள் ஐந்து பெயர்கள் ஆங்கிலத்தில் டிரெங்குபார் (Tranquebar), பாயின்ற் காலிமீர் (Point Calimere), கொல்லெரூன் (Coleroon), போர்ட்டோ நோவோ (Porto Novo), கோல்டன் ராக் (Golden Rock) எனவும், தமிழில் தரங்கம்பாடி, கோடிக்கரை, கொள்ளிடம், பரங்கிப் பேட்டை, பொன்மலை எனவும் இப்போது பெயர்ப் பலகைகளில் காணப்பெறுகின்றன. இனி 1-11-75 முதல் தமிழிலுள்ள நிலையப்பெயர்கள் ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு செய்யப்பெற்று Tharangampaadi, Kodikkarai, Collidam, Paranghipettai, Ponmalai என ஆங்கிலத்தில் பொறிக்கப்பெறும் என்பதும், 1975 திசம்பர் முதல் நாளிலிருந்து சங்கரநயினார்கோவில் Sankaranainarkovil என்ற புகைவண்டி நிலையப்பெயர் சங்கரன்கோவில் - Sankarankovil என்று மாற்றம்பெற்று வழங்கப்படும் என்பதும் மகிழ்ச்சிக்குரியனவாகும்.

மேலே மாற்றஞ் செய்துள்ளதுபோல 'McDonald's Choultry'—மகுடஞ்சாவடி என்ற நிலையப்பெயரை 'Mahudan-chavadi' என மாற்றவேண்டியது பொருத்தமாகுமன்றோ !

1947 ஆம் ஆண்டு கழகம் செய்த முயற்சியினால் சில புகை வண்டி நிலையப்பெயர்கள் மாற்றம் செய்யப்பட்டன. அம் முயற்சிக்கு அப்போது தமிழ்நாட்டுக் கல்வி அமைச்சராகவிருந்த மாண்புமிகு தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியாரவர்கள் முன் வந்து உதவி செய்தமையினை மறக்கமுடியாது. ஜங்ஷன்—Junction என்ற சொல்லுக்குக் 'கூடல்' என்ற தமிழ்ச் சொல்லை அமைக்குமாறு யான் விரும்பினேன். ஆனால் அவர்கள் உள்ளத்துக்கு அச் சொல் பிடிக்காமையினால் 'சந்திப்பு' என்ற சொல்லை அமைக்குமாறு பரிந்துரைத்தனர்.

அம் முயற்சினாற்றான் Madras Beach—மதராஸ் பீச்சு; Madras Fort—மதராஸ் போர்ட்; Madras Park—மதராஸ் பார்க் என்றிருந்த நிலையப் பெயர்கள் சென்னை-கடற்கரை; சென்னை-கோட்டை, சென்னை-பூங்கா எனத் தமிழ்ப் பெயர்களில் மாற்றம் பெற்றன. ஆனால், அவற்றை ஆங்கில எழுத்துப் பெயர்ப்பிலும் 'Kadarkkarai', 'Kottai,' 'Poongha' என வழங்கச் செய்வதே பொருத்தமாகும்.

சில நிலையப் பெயர்களோடு இணைந்த கேம்ப் (Camp)—டேம் (Dam), ரோடு (Road), டவுண் (Town), பெட் (Pet), பிரிட்ஜ் (Bridge), மார்கெட் (Market), கன்றோன்மென்ற் (Cantonment), சென்ட்ரல் (Central), கேரேஜ் ஒர்க்ஸ் (Carriage works), லோகோ ஒர்க்ஸ் (Loco works) என்ற சொற்களை முறையே 'தங்கல்', 'அணை', 'சாலை', 'நகர்', 'பேட்டை', 'பாலம்', 'சந்தை', 'பாளையம்'. 'மையம்', 'பெட்டித் தொழிற்சாலை', 'பொறித் தொழிற்சாலை' என்று தமிழில் மாற்றஞ் செய்வதோடு அவற்றை ஆங்கில எழத்துப் பெயர்ப்பில் தமிழ் ஒலியிலே வழங்கச் செய்தலும் வேண்டும்.

தமிழிலுள்ள சிவகங்கை, செங்கல்பட்டு, தூத்துக்குடி, செங்கோட்டை, செட்டிநாடு, ஈரோடு, திண்டுக்கல் ஆகிய நிலையங்களின் பெயர்கள் சிவகங்கா (Sivaganga), சிங்கல்பட் (Chinglepu1), டுற்றிக்கொரின் (Tuticorin), ஷெங்கோட்டா (Shencottah), செட்டிநாட் (Chettinad), ஈரோட் (Erode), டிண்டிக்கல் (Dindigul) எனக் காணப்பெறுகின்றன. ஆனால் வெள்ளோடு 'Vellodu' என்ற பெயர் மட்டும் தமிழிலும் ஆங்கிலத்திலும் சரியாகவே இருக்கின்றது.

ஆற்றைக் குறிக்கும் பெயர்களாகிய இடையார், கல்லார், திருநள்ளார், பொறையார், வடவார் ஆகிய நிலையப் பெயர்கள்

இடையாறு, கல்லாறு, திருநள்ளாறு, பொறையாறு, வடவாறு என இருத்தல் வேண்டும். ஆனால் அவை தமிழிலும் ஆங்கிலத்திலும் 'ஆர்' விகுதிகொண்டே முடிகின்றன.

கிணற்றைக் குறிக்கும் நாரைக்கிணறு, மல்லங்கிணறு பூலாங்கிணறு என்ற நிலையப் பெயர்கள் ஆங்கிலத்தில் Kinar என்று இருக்கின்றன. பூலாங்கிணறு மட்டும் தமிழிலும் 'கிணர்' என்றே இருக்கிறது.

கடற்கரையோரமுள்ள ஊரைப் 'பட்டினம்' என்றும், நாட்டுள்ளடங்கிய பெரிய ஊரைப் 'பட்டணம்' என்றும் வழங்குதல் வேண்டும். ஆனால் 'வீரபாண்டிய பட்டினம்' என்பது ஆங்கிலத்தில் சரியாக இருந்தும் தமிழில் மட்டும் பட்டணம் என்று இருக்கிறது.

ஊரார் உண்ணும் நீரையுடைய குளத்துக்கு 'ஊருணி' என்று பெயர். ஆனால் செக்காவூரணி (Chekkavurani) பேராவூரணி (Peravurani) எனத் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஊருணி என்பது ஊரணி எனவே காணப்பெறுகிறது.

திருவள்ளூர்—Trivellore என்ற நிலையப்பெயர் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஒன்றுக்கொன்று ஒலி வடிவில் வேறுபட அமைந்துள்ளது. நூல் வழக்கில் திருஎவ்வளூர் எனவே வழங்கப்பெறுகின்றது. அதனால் Thiruevvaloor என ஆங்கில எழுத்துப் பெயர்ப்பில் தமிழுடன் அமைதல் வேண்டும். மானூர்—Manur என்ற நிலையப் பெயர் தவறு. மணவூர்—Manavoor என்பதே வழங்கும் பெயராகும்.

அரக்கோணம்—Arkonam என்ற நிலையப் பெயரும் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஒன்றுக்கொன்று வேறுபாடாக அமைந்துள்ளது. அறக்கோணம்—Arakkonam என்பதே பொருட் பொருத்தமுடைய பெயராகும்.

சில நிலையப் பெயர்கள் தமிழில் சரியாகவும் ஆங்கிலத்தில் தவறாகவும், சில ஆங்கிலத்தில் சரியாகவும் தமிழில் தவறாகவும் காணப்பெறுகின்றன.

இனித் திருக்கோயில்களிலுள்ள நிலையங்களைக் குறித்து ஆராய்வோம்:

புகழ் பெற்ற பழனியாண்டவர் கோயில்கொண்டுள்ள பழனி, ஆங்கிலத்தில் பல்னி (Palni) என வழங்குவது எத்துணை வருந்துதற்குரியது. பழனி என்ற சொல் ஆங்கில எழுத்துப் பெயர்ப்பில் Pazhani என்றாகும். இதனை விரைந்து மாற்றச் செய்வது இன்றியமையாததாகும்.

மாயவரத்தைத் தேவாரத்தில் பயிலுகிறபடி 'மயிலாடு துறை' என மாற்றும்படி 19:7 இல் வேண்டினேம். தமிழ்ப் பகைவர் உள்புகுந்து 'மாயூரம்' என மாற்றச் செய்துள்ளனர். திருஞானசம்பந்தர் 'வானம் மயிலாடுதுறையே' என்றும், அப்பர் பெருமான் 'நிலமா மயிலாடுதுறையனே' என்றும் அருளியுள்ளனர் சென்னையில் ஆமில்டன் பாலம் அம்பட்டன் பாலம் ஆகி, ஆங்கிலத்தில் Barber's Bridge ஆன கதைபோல மயிலாடுதுறை மாயூரம் ஆகி மாயவரம் ஆயிற்று. அதேபோல மயிலாடுதுறை அம்மையின் பெயர் 'அஞ்சொல்நாயகி'. அவ்வழகிய பெயர் அஞ்சலை நாயகி எனக் கூறப்பெற்றுப் பின் அபயாம்பிகை ஆயிற்று.

அச்சிறுபாக்கம், திருவல்லம், திருமாற்பேறு, கருவூர் என்ற திருவூர்ப்பெயர்கள் அச்சரப்பாக்கம், திருவலம், திருமால்பூர், கரூர் என்று நிலையங்களில் எழுதப்பெற்றுள்ளன.

"அச்சிறுபாக்கம தாட்சி கொண்டாரே"

"சேயவன் உறைவிடம் திருவல்லமே"

"மருந்தவன் வளநகர் மாற்பேறே"

"கன்னினர் கருவூருள் ஆனிலை"

என்னும் திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்களால் இப்போது வழங்கும் நிலையப் பெயர்களை அச்சிறுபாக்கம் Acchirupakkam; திருவல்லம் - Thiruvallam, திருமாற்பேறு - Thirumarpperu, கருவூர்-Karuvoor என மாற்றஞ் செய்யப்பெறுதல் வேண்டும்.

மேலும் திருக்கடையூர், கும்பகோணம், வைத்தீசுரன் கோயில், வேதாரண்யம், விருத்தாசலம், தக்கோலம், திருக்கோயிலூர் ஆகிய திருவூர்களைக் கீழே குறிப்பிட்டுள்ள தேவாரப்பாடல் அடிகளிற் பயின்றுள்ளபடி கடவூர்-Kadavoor; குடந்தை - Kudanthai ; புள்ளிருக்கு வேளூர் - Pullirukku velloor; திருமறைக்காடு - Thirumaraikkadu; திருமுதுகுன்றம் Thirumuthukundram ; திருவூறல் - Thiruvooral ; திருக்கோவலூர் - Thrukkovaloor என மாற்றியமைத்தல் வேண்டும்.

"கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனீரே"

—அப்பர்

"குடந்தைக் கீழ்க் கோட்டங் கூத்தனுரே"

"புள்ளினர் பணி புள்ளிருக்கு வேளுரே" —அப்பர்

"மங்கையைப் பாகம் வைத்தார் மாமறைக் காடனுரே"

—அப்பர்

''தீங்கரும்பைத் திருமுது குன்றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே'' —அப்பர்

''ஒறுத்தருள் செய்த பிரான் திருவூறலை உள்குதுமே''
—சம்பந்தர்

''கொத்தையேன் செய்வதென்னே கோவல் வீரட்டனுரே''
—அப்பர்

'திருத்தூங்கானை மாடம்' என வழங்கப்பெறும் பெண்ணாகடம் என்ற திருவூர் பெண்ணடம் எனப் புகைவண்டி நிலையப் பெயராக அமைந்துள்ளது. பெண் (தேவ கன்னியர்), ஆ (காமதேனு), கடம் (வெள்ளையானை) மூன்றுங்கூடி வழிபட்ட ஊரானதால் 'பெண்ணகடம்' என்ற பெயரே சரியானதாகும்.

இனி வைணவத் தலங்களாகிய திருவரங்கம், திருவில்லிபுத்தூர், திருவைகுண்டம் என்பன ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீவைகுண்டம் என்று மாறின. பிற்காலத்தில் 'திரு' என்ற அடைமொழியை 'ஸ்ரீ' என வடமொழியாளர் மாற்றியுள்ளனர். 'திரு' என்ற அடைமொழி கொண்ட திருஎவ்வளூர், திருப்பதி, திருக்குறுங்குடி, திருமழிசை, திருக்கண்ணமங்கை முதலிய வைணவத்தலங்கள் இருக்கின்றனவே. 'திருவரங்கம் பெரிய கோயில்' என்றே கல்வெட்டு கூறுகிறது. திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்துமாலை முதலிய நூல்களும் சான்று பகர்கின்றனவே.

மேலே கூறியுள்ளவைபோல இன்னும் சில நிலையப் பெயர்களைக் காரணங் கூறித் திருத்தஞ் செய்தல் வேண்டும் என்றும், தமிழிலுள்ள நிலையப் பெயர்களை ஆங்கிலத்தில் எழுத்துப் பெயர்ப்புச் செய்யும்போது சில விதிமுறைகளைக் கையாள வேண்டுமென்றும் கூறி யான் தொகுத்துக் கொடுத்த நிலையப் பெயர்ப்பட்டியினைப் பார்வையிட்டு உதவிய என் பெருமதிப்புக்குரிய ஆட்சிமொழிக் காவலர் திருவாளர் கீ. இராமலிங்கனார் அவர்கட்கு நன்றிமிகவுடையேன்.

தவருகவும் தமிழ் வழக்கிற்கும் இலக்கண வழக்கிற்கும் மாருகவுமுள்ள புகைவண்டி நிலையப் பெயர்களை மாற்றி அமைப்பதற்குரிய நடவடிக்கைகளை விரைவிலே எடுத்தருளும்படி 'எங்குந்தமிழ் எல்லாந்தமிழ்' என்ற விழுமிய கொள்கையினை மேற்கொண்டுள்ள தமிழக அரசை நாம் பணிவன்போடு வேண்டிக்கொள்வோம்.

—வ. சு.



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

அழகரடிகள் (இளவழகனர்)

## 2. ஆசிரியர் மாணவர்

பேரவையின் உள்ளே நான் எப்படிச் சென்றேன், அங்கே எப்படி அமர்ந்தேன் என்பனவெல்லாம் நான் அறியாதவை; என்னை மறந்தேன் என்பதே முற்றிலும் உண்மை.

குப்புசாமியும் நானும் சிறிது தொலைவில் எதிரில் அமர்ந்து கொண்டிருந்தோம்; அடிகளார் வாய் மலர்ந்த மெய்ப்பொருளை நாங்கள் ஆர்வமாய்க் கேட்டு வந்தோம்; நான் அக் கருத்துக்களில் அப்படியே ஆழ்ந்து விட்டேன்; அடிகளார் சொன்னவற்றிற் சில:

முதல் விரிவுரை :

" 'ஓம்' என்பது தமிழ்ச் சொல்; தமிழ்மொழி என்பது உலகத்தின் இயற்கை மொழி; மக்கள் மொழி! மக்கள் காதுகளைப் பாருங்கள்; மேலே பெரிய வட்டம்; கீழே சிறிய வட்டம்; இடையே வளைவுகள் உள்ளன. 'ஓ' வடிவும் அப்படியே உள்ளது!

" 'ஓ' என்பதுசெவியிற் சேரவேண்டிய ஒலி; சொல்லும் வாயைவிடக் கேட்கும் செவி உயர்ந்தது; வாய் இடைப் பட்டது தானே; 'ஓ' என்று ஒலிக்கும் வாயின் வடிவை நோக்கி 'O' என்று ஆங்கிலேயர் எழுதிக் கொண்டனர்; அது உயர்ந்ததாகுமா? சமக்கிருத மொழிக்கு நாகரி எழுத்தாளர், இயற்கைக்கு வேருன செயற்கையாய், மேலே சிறிய வட்டமும் கீழே பெரிய வட்டமுமாய்த் தலை கீழாய் எழுதியிருக்கிருர்கள். வாய் இடைப்பட்டதானுலும் ஏதோ ஒரு வகையில் ஆங்கிலத்தில் இயற்கையாய் அமைந்திருக்கிறது! நாகரியில் அப்படிக் கூட இல்லை. உயர்ந்த செவியின் வடிவை உள்ளபடியே இயற்கை தோன்ற எழுதியிருக்கும் தமிழ், ஆங்கிலத்தைவிடச் சமக்கிருதத்தைவிட எவ்வளவு சிறந்தது பாருங்கள்!

"திருஞானசம்பந்தப் பெருமான் அதனல் 'தமிழ்' என்னுந் 'தகர'த்தோடு 'ஓ' என்னும் ஓங்காரத்தையும்

சேர்த்துத் 'தோ' என்னும் முதலெழுத்தில் தம் திருப் பதிகத்தைத் தொடங்கினர். அவ் வடிவுக்குக் காரணமா யிருக்கும் காதுகளையும், ஓங்காரத்தின் விரிவாகிய செவ்விய மெய்ப்பொருள்களைக் கேட்டலால் 'செவி' என்னும் பெயராற் குறித்தார். அப்படிச் செவ்விய பொருளைக் கேட்டலால் அதற்கொரு பூணும் அணிந்து, 'தோடுடைய செவி' எனத் திருவாய்மலர்ந்தார்.

''மக்கள் வடிவமே பெரும்பாலும் சிவத்தின் வடிவ மாய்த் தோற்றியது; துரிதமாகக் கேட்கும் அருளுணர்வை நினைந்து இடப்பாகக் காதைக் குறித்துத் 'தோடு' என்னும் அம்மையின் அணியைச் சிறப்பித்தார். 'செவ்விய அறி வுரைகள் கேட்டலையே 'காது குத்துதல்' என்ப; 'பூண்' அணிதலும் இதனுல் நேர்ந்தது!

''அதோடு, 'ஓ' என்று ஒலியிட்டுக் கொண்டிருப்பதை எவ்வளவு நேரம் நீள முழக்கிக்கொண் டிருக்க முடியும்? 'ம்' என்று உதடு மூடி முடிக்கவேண்டும்; அவ் வகையில் 'ஓ' என்னும் முதலெழுத்தோடு 'ம்' என்னும் இறுதி எழுத்தும் சேர்ந்து 'ஓம்' என்னும் இயற்கைத் தமிழ்ச் சொல், இயற்கைகளின் மொழியாக எழுந்தது!

'''ஓ' என்று தொடங்கியதற்கும் 'ம்' என்று முடிப் பதற்கும் இடையே எல்லா மெய்ப்பொருள்களும், ஆலம் பழத்து விதைகளைப்போல அத்திப்பழத்து விதைகளைப் போல அடர்த்தியாய் அடங்கியிருக்க வேண்டும். அதனுலே தான் நம் திருமுறைகள் முழுதும் 'ஓம்' என்பதனுள் அடக்கம் என்று தெரிவதற்காக, முதல் திருமுறையின் முதல் பதிகத்தின் முதல் பாட்டின் முதல் சொல்லின் முதல் எழுத்து 'ஓ' எனத் தொடங்கப்பட்டது; பன்னிரண்டாவது கடைசி திருமுறையாகிய பெரிய புராணத்தின் கடைசி பாட்டின் கடைசி சொல்லின் கடைசி எழுத்து 'ம்' என்று முடிந்திருக்கிறது!

''வேறு வேறு காலத்தில் வேறு வேறு ஆசிரியர்களாற் பாடிய இத் திருமுறைகள் இங்ஙனம் தம்முள் ஒற்றுமை கொண்டு தொடக்கமும் முடிவும் ஒரு சொல்லாய் அமைந் திருப்பது எவ்வளவு தெய்வச் செயல், பாருங்கள்! இத் திருமுறை வாக்குகளை ஒரே தெய்வ வாக்கு என்றுதானே சொல்ல வேண்டும்! ஆசிரியர் பலர் வாக்குகளாகக் காணப் பட்டாலும், உண்மையில் அவர்கள் வழியாக ஒரு தெய்வ உணர்வே உந்தியிருக்க வேண்டும். எண்ணிப் பாருங்கள், அன்பர்களே, எண்ணிப் பாருங்கள்! (ஆரவாரம்)

"இந்த அமைப்பைத் 'தற்செயல் நேர்வு' என்று சிலர் கருதக்கூடும்; 'தற்செயல்' என்பதற்கு என்ன பொருள் என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. 'தன்' என்பது இறைவன்; நம் 'சிவஞானபோதம்' இக்கருத்தை அறிவிக்கும் (பாயிரம்); 'தற்செயல்' என்பது இறைவன் செயல்!

"இது மட்டுமா? 'ஓ' என்னும் வடிவில் தொடக்கத்தில் மேலே ஒரு வட்டமும் முடிவில் கீழே நுனி வளைந்த ஒரு நீட்டமும் இருத்தல் எல்லார்க்கும் தெரியும். நீட்டத்தின் நுனி வளைவைத்தான் கீழே சிறிய வட்டம் என்று முன்பு கருதினேம். வட்டமும் நீட்டமுமான இவ் விருவடிவுகள் சாத்திரத்தில் 'விந்து' 'நாதம்' எனப்படுகின்றன. இவ் விரண்டுங் கூடியதே 'பொருள்' எனப்படும். உலகப் பொருள்களை உற்றுப் பாருங்கள்! எல்லாம் வட்டமும் நீட்டமும் தம்முள் அமைந்திருப்பது தெரியும்.

'விதைகள் இலைகள் மலர்கள் பழங்கள் முதலியனவும், கை கால் தலை உடல் முதலியனவும், மின்னல் கதிர் பிறை முதலியனவும், மலை ஆறு குளம் கிணறு முதலியனவும் இங்கே எண்ணிப் பார்க்கலாம். வட்ட வடிவே மிகுதியாகத் தோற்றும் நாரத்தம் பழம், இலந்தைப் பழம், கொடி முந்திரிப் பழம் முதலியவற்றின் காம்புகளை நோக்கினால் நீட்டம் விளங்கிவிடும்; பலா மா வாழைப் பழங்களிலும் பிறவற்றிலுமாகப் பெரும்பாலனவற்றில் நீட்டமும் விரிந்து நன்றாய்த் தெரிகிறது. வட்டமே என்றாலும் உருண்டையே என்றாலும் அது நீட்டக் கோட்டினால் அமைந்திருப்பது யாருக்குத் தெரியாது?

"வட்ட நீட்டங்களின் சேர்க்கையாகிய 'ஓ' வடிவு, இயற்கையான வடிவே என்பது இவைகளாலெல்லாம் இனிது விளங்கும். இவ்வொலி வடிவு பிள்ளையார்; அதன் ஒளி முருகன்; அதனால் பிள்ளையார் முதற்பிள்ளை; முருகன் இளையனார்; எல்லாம் ஆண்டவன் தோற்றம்; அதனால் ஆண்டவனுக்குப் பிள்ளைகள் எனப்பட்டனர். மூலமான மாயையிலும் அதன் பிரிவுகளான 'நாத' 'விந்துக்'களிலும் ஆண்டவன் திருவருள் நின்று நிறைந்து இயங்குவதனால் அங்ஙனமெல்லாம் உருவகம் செய்யப்பட்டன!

"இன்னொன்று பாருங்கள்; பலவேறு மக்கள் தத்தம் தாய்மொழிகளில் கூட்டமாய்ப் பேசும்போது, கவனித்தால் ஓர் உண்மை காணலாம். தொலைவிலிருப்பவர்களுக்கு மொத்தமாய் அது 'ஓ' என்றே கேட்கிறது. என்ன இப்படி

'ஓ' என்று இரைகிருர்களே, என்றும் நாம் சொல்லு கிரேம். இதிலிருந்து என்ன தெரிகிறது ?

"'ஓ' என்று கேட்கும் மொத்த ஒலியின் உள்ளே அவரவர் தாய்மொழிகளாகிய பல்வேறு மொழிகளும் அவற்றின் விரிவுகளும் அடங்கியிருக்கின்றன என்பதை அறியலாமன்ரே!

"அன்பர்களே, உலகத்தின் எல்லா மொழிகளுக்கும் தாயாய் விளங்கும் மூல ஒலி 'ஓம்' என்பதும், தமிழ் வடிவாய்த் திகழும் 'ஓம்' தமிழ்ச் சொல், உலகத்தின் எல்லா மொழிகளுக்கும் மூலமொழி முதல்மொழி இயற்கைமொழி என்பதும் எளிதில் புலப்படுகின்றது!

"'ஓம்' என்பது தமிழ்தான் ஒன்பதற்கு வேறு ஒரு குறிப்பும் உள்ளது. 'ஒ' 'ஓ' என்னும் குறில் ஒலி, நெடில் ஒலி இரண்டும் தமிழில் உள்ளன; சமக்கிருதத்தில் 'ஓ' என்னும் நெடில் ஒலி மட்டும் உள்ளது; இது இயற்கை யாகாது; ஏனென்ருல், குறில் தோன்றித்தானே நெடில் தோன்ற வேண்டும்!"

இவ்வளவில் அடிகள் இருக்கையில் அமர்ந்துகொண்டார்; பேரவையும் சிறிது அசைந்தது; அருகில் இருந்தவர், அடி களுக்குச் சிறிது பானகப் பால், பருக அளித்தார். ஓதுவார் சிலர், திருமுறை இன்னிசை ஓதினர்; பெரும்பாலார் திருமுறை யும் இன்னிசையும் கேட்டு உருகினர்; அடிகள் சற்று இளைப் பாறித் திரும்பவும் எழுந்து நின்று, இனிய கீச்சுக் குரலில், மற்றுஞ் சில உண்மைகளை விரித்துரைக்கத் தொடங்கினர்; பேரவையும் அமைதி கொண்டது.

"திருமறை ஓதுவோர்முதலில் ஆண்டவனையும் அவன் முதல் ஒலியையும் நினைந்து 'ஓம்' என்று சொல்ல வேண்டும்; கடைசியிலும் சொல்ல வேண்டும்' இது பொது மரபு!

"திருமுறைகளில் முதல் சொல்லிலும் கடைசிச்சொல் லிலும் 'ஓம்' கலந்துவிட்டதனுல் அதற்கு ஈடாகவும், அம்பலக் கருத்துத் தெரியும்படியும் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்வது சிறப்பு மரபாயிற்று. அதை இப்போது திருமுறை ஓதியவர் மூலம் கேட்டோம்.

"'ஓம்' என்பது எல்லாச் சமயத்துக்கும் பொது; திருச் சிற்றம்பலம் என்பது சிவ சமயத்துக்கே சிறப்பு! இரண்டும் ஒன்றே என்பதற்காகத் தான், 'திருச்சிற்றம்பலம்'என்னும்

ஞான வெளி, 'ஓம்' வடிவில் அமைந்திருக்கிறது; 'திருச் சிற்றம்பலம்' என்பதில், விளக்கமும் சிறப்பும் உள்ளன!

"அன்பர்களே, 'தமிழ்' என்பதும் 'ஓம்' என்றே கொள்ளப்படும். அச் சொல்லில் உள்ள 'தமி' என்னும் பகுதியில் அ, இ என்னும் உயிரெழுத்துக்கள் உள்ளன. 'ஓ' என்பதில் அ, உ என்னும் இரண்டெழுத்துக்கள் காணப்படும். 'இ' என்னும் இடை உயிர் மறைவா யிருக்கிறது; 'இ' இல்லாமல் 'உ' உண்டாக வழியில்லை; 'இ' எழுந்தபின் 'உ' உண்டாகாமற் போவதும் இயல்பாகாது; சிலர் 'தமிழு' என்று ஒலிப்பதற்கும் இது காரணம். சிற்றம்பலத்தின் சொற்பிரிப்பான 'சிறு அம்பலம்' என்பதிலும் அ, இ, உ மூன்றும் இருப்பதைக் காணலாம். ஆதலால் 'ஓ'காரமும் அ, இ, உ மூன்றும் உடையதென்றே கொள்ளப்படும். இதனால், 'தமிழ்' என் பதும் 'ஓ' என்பதும் ஒன்றே ஆயின.

"அருள் வெளியாகிய ஞான அம்பலத்தில், திருச் சிற்றம்பலத்தில், இயங்குவதே சிவத்தின் ஆடலியக்க மாதலின், 'தமிழ்மொழி' அந்த ஆடலியக்கத்தின் இயற்கை யொலியாய்த் திகழ்கிறது! திருச்சிலம்பொலியாய்ப் பொலி கின்றது!

"திருக்குறள் தமிழ்மறை யாதலால் அதன் முதலெழுத்தும் கடைசியெழுத்தும், தமிழ்மொழியின் முதல் எழுத்தாகிய 'அகரமும்' கடைசி எழுத்தாகிய 'னகரமு'மாக அமைந்திருக்கின்றன! இங்ஙனம் தமிழால் அமைந்தன வாயினும், திருக்குறள் என்னுந் தமிழ்மறை 'ஓம்' என் பதன் விளக்கமே; திருமுறைகள் சிறப்பு மறையாதலின், 'ஓம்' வடிவை முதலிலும் கடைசியிலுமாக வெளிப்படை யாய்க் கிளந்தன!

எனது நிலை

குப்புசாமியும் நானும் அன்றிரவே சைதைக்குத் திரும்பி விட்டோம்; வழியிடை சற்றேறக்குறைய ஆறுகல் தொலைவு; நடந்துதான் வந்தோம்; அக்காலத்தில் பேருந்து இல்லை. நடந்துவந்தபோது நான் உள்ளந் தோய்ந்து பேசவில்லை; என் உள்ளத் தடம் முழுதும் அடிகளார் பேச்சும் கருத்தும் நிரம்பித் துளும்பியபடியே இருந்தன;

சைதைக்கு வந்ததும் உணவு உண்டு அவரவர் படுக்கைக் குச் சென்றோம்; அலுப்பில் குப்புசாமி உடனே உறங்கிவிட்டார்;

நான் விளக்கொளியில் அமர்ந்து அடிகளார் பேச்சை அப்படியே குறித்து வைத்தேன். 55 ஆண்டு கழித்து இப்போது அது பயன்படுகின்றது. பின்பு, படுத்துக்கொண்டேன்; இமைகள் மூடியிருந்தனவே தவிர, உறக்கம் வரவில்லை; அடிகளார் பேச்சொலி 'கணீர்' என்று கேட்பதுபோலிருந்தது. பேச்சின் இனிமையிலும் கருத்தாழத்திலும் தமிழ் நலத்திலுமே என் உள்ளம் மிதந்தது; சுற்றிச் சுற்றி வந்தது!

எப்பொழுது உறக்கம் வந்ததோ தெரியாது; பொழுது விடிந்தது; உன்மத்தம் பிடித்ததுபோல் இருந்தேன்; ஒன்றும் நாடவில்லை; வழக்கம்போற் கடமைகள் நடந்தன; பகலுணவு உண்டதும், 'சுந்தரம்! என்ன இப்படி இருக்கின்றாய்; நேர மாயிற்றே; இன்றும் இராயப்பேட்டையில் அடிகளார் பேச் சுண்டு; புறப்படலாமா?' என்றார் குப்புசாமி! காத்திருந்ததுபோல் உடனே புறப்பட்டு விட்டேன். அன்று ஞாயிற்றுக்கிழமை!

வழிநெடுக எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியது மனம்; 'சிறியேனாகிய எனக்கு அடிகளார் ஆசிரியராக வாய்ப்பாரா? எவ்வளவு பெரியவர் அவர்! அவர் உள்ளத்தில் எவ்வளவு நுட்பமான உண்மைகளெல்லாம் பொதிந்திருககின்றன! எளியேன் எங்கே, மாட்சி சிறந்த அப் பெரியார் எங்கே!

'திண்ணைப் பள்ளிக்கூடங்களில் 'ஓம் அரி நம' என்று பாடம் தொடங்கும்; அடிகளார், முதல் காட்சியிலேயே எதிர் முகத்தில் 'ஓம்' உண்மைகளை விளக்கியிருப்பதனால் ஒருகால் ஆசிரியர் மாணவராவதற்கு இந்த வாய்ப்பு ஓர் இயற்கை நேர்வாக இருக்கலாமோ? ஒன்றும் அறியாச் சிறியேற்கும் அத்தகைய பெருநலம் கூடிவருமோ!'

பேரவையை அணுகியதும், சற்று முன்னால் தள்ளி நானும் அன்பரும் அமர்ந்துகொண்டோம். தலைமையுரை சிறிதாயிருந் தது; திரு.வி.க. முதலிய அறிஞர்கள் பேசியதைச் செவிமடுத் தோம். அடிகளார் முடிவுரை விரிவாய்ப் படர்ந்தது. 'சைவ சமயத்தின் மாண்புகள்' விளக்கியுரைக்கப்பட்டன; அவற்றில் ஒரு குறிப்பு.

இரண்டாவது விரிவுரை :

''இன்ப உணர்ச்சி எல்லா உயிர்க்கும் உண்டு; அதனை அடையவே அவை முயல்கின்றன; மாணிக்கவாசகர், முற்றின்பமுடைய சிவத்தைச் சேர்ந்து அதனை அடைய வேண்டும் என்று தெரிவிக்கிறார். அவர் திருவாசகத்தைப் பாருங்கள்.

"நினைத்தனை யுள்ளதோர் பூவினில் தேன்உண்ணுதே
வினைத்தோறும் காண்டோறும் பேசுந்தோறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றாதாய் கோத்தும்பீ!"

"கடவுள் இன்பம் எத்தகையதென்பதையும் அவர், "மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடல்" என்று அருளிச் செய்வார். காரணம், அவன் 'நன்றுடைய வன், தீயதில்லாதவன்; அதனால் எந்நாளும் இன்பமே யன்றித் துன்பம் சிறிதும் இல்லாதவனுயிருக்கிருன்.

"அத்தகைய பேரின்பத்தைத் தனக்கு இயல்பாகக் கொண்டிருக்கும் கடவுளை அந்த இன்பப் பெயரால் அழைப்பதுதானே சிறப்பு! 'சிவன்' என்னும் பெயர் அங்ஙனம் பேரின்பப் பொருள் உடையது!

"மற்றைச் சமயங்களெல்லாம் இறைவனை வேறுவேறு பெயர்களாலும் வேறு வேறு மந்திரங்களாலும் அழைக் கின்றன! சைவ சமயம் ஒன்றுதான், மங்களமான இன்பப் பெயரை ஆண்டவனுக்கு இட்டுத், தனது மூலமந்திரமாகிய திருவைந்தெழுத்திலும் 'சிவம்' என்னும் பெயரை உடைய தாயிருக்கிறது!

"கடவுள் வேறு பல வல்லமைகளை உடையவனுயிருந் தாலும், அவற்றுலெல்லாம் பெயரிட்டு அழைப்பதனுல் நமக்கு ஆவதென்ன? முடிவாக நமக்கு வேண்டுவது இன்பந்தானே!

"தமிழின் அகப்பொருளாயிருப்பதை 'இன்பம்' என்பர். அகத்துக்கு அகமாய் உயிருக்கு உயிராய், மேன் மேல் இன்பமாய் விளங்குவது சிவம்! சிவசமயத்தின் மாட்சி எவ்வளவு சிறந்தது பாருங்கள்!

அடிகளின் தனித்திறம்

இரவே இருவரும் சைதை சேர்ந்தோம். ஆங்கில நாட்டுப் பேச்சுவல்ல பெரும்புலவர் Johnson ஐ விடத் தோற்றத்திலும் கண்ணியத்திலும் தலைமையுரையிலும் இராயப்பேட்டைப் பேரவையில் அடிகள் சிறந்தவராய்த் தோற்றியது. பெருமக்கள் குழாத்தில் ஒரு தனித் திறத்துடன், வான ஞாயிறே வழுக்கி விழுந்ததுபோல அடிகள் திகழொளி வீசி நின்ருர். Johnson புகழ் பேசும் Boswell ப் போலவாவது அடியேன் வளர முடியுமா என்று நினைத்துக்கொண்டேன். அப்போது அவ்விரு வரையும்பற்றி நான் கேள்விப்பட்டிருந்தேன்.

நாள் கழியக் கழிய அடிகளாரைப் பல்லாவரம் சென்று காண உள்ளம் முறுகி முறுகி எழுந்தது. எப்போதும் அடிகள் நினைவாகவே நான் இருந்துவந்தேன்.

ஓவியமும் புலமையும் :

பயிற்சிப் பள்ளியின் பாடங்கள் எனக்கு அவ்வளவாகப் பொருளில்லை; நான் அவற்றில் முதல் மதிப்பெண் பெறுவதே வழக்கம். என் தகுதிப் பதிவேட்டில் எல்லாம் Good Good என்றே குறித்திருக்கும்; ஒப்புக்கு எங்காவது ஒன்று V. Fair குறிக்கப்படும். என் விடைத் தாள்களையும் பெரும்பாலும் பார்ப்பதில்லை. அவ்வளவு நம்பிக்கை!

வருகைப் பதிவேட்டிலும் மதிப்பெண் பதிவேட்டிலும் இரண்டாவதாக இருந்தவர் அச்சிறுபாக்கம் இராசமாணிக்கம் என்பவர். அச்சிறுபாக்கம் திருஞானசம்பந்தர் பாடல் பெற்ற தலம். நான் அடிக்கடி அக் கோவிலுக்குச் செல்வேன்; அப்படியே இராசமாணிக்கம் வீட்டுக்கும் போவதுண்டு. அவர், நண்பர் முறையில் அணுக்கமானார்; பிற்காலத்தில் அவர் சென்னைக் கொண்டித்தோப்பில் 'சமரச சுத்த சன்மார்க்க சங்க'த்தின் தலைவராயிருந்து 'அருட்பா'ப் பதிப்பிட்டுப் பின் காலமாய் விட்டார்.

இராசமாணிக்கம் எப்போதும் ஓவியக் கலையே நாட்டமாயிருப்பார்; அதில், அவர் வருவாய் தேடிவந்தார். புனையா ஓவியத்தில் அவர் உயர்நிலைத் தேர்வு பெற்றிருந்தார். நான் எப்போதும் அடிகள் நினைவில் தமிழ் நூல்களே நாட்டமாயிருப்பேன். இராசமாணிக்கம், தாம் தமிழ் பயிலாமைபற்றி ஏதோ காரணம் கூறுவார். அவர் தொடர்பால் நான் ஓவியக் கலையிலும் முன்பே ஓரளவு பயின்று, புனையா ஓவியம் இடைநிலைத் தேர்வும் (Out one Drawing Intermediate), அளவியல் ஓவியம் இடைநிலைத் தேர்வும் (Geometry Drawing Intermediate) கற்பனை ஓவியம் தொடக்க நிலைத் தேர்வும் (Design Drawing Elementary), வண்ண ஓவியம் தொடக்க நிலைத் தேர்வும் (Painting Drawing Elementary) என நான்கிலும் முதல் வகுப்பில் தேர்ந்து ஒரு தொகுப்புத் தகுதித்தாளும் (Group Certificate) அரசிற் பெற்றிருந்தேன். பயிற்சி முடிந்து நான் சூளைமேட்டில் இருந்தபோது வண்ண வண்ண ஓவியங்களாற் சுற்றிலும் கரை கட்டி, வண்ணச் செய்யுட்களால் அடிகளுக்குக் கடிதம் எழுதுவதுண்டு; இளமைத் துடுக்குக்குச் சில வேளைகளில் கண் ஏது?

சைதையில் ஒவ்வொரு நாளும் அடிகளார் நூல்களை ஆராக் காதலுடன் பயின்றுவரும்போது, 'முல்லைப் பாட்டு' 'பட்டினப் பாலை' ஆராய்ச்சியுரைகள் எனக்கு மிகவும் இனிப்பா யிருந்தன. அவற்றை அடிக்கடி படிப்பேன்; அவற்றின் 'ஒவியக் கலை' 'புலமைக் கலை' என்னும் இரண்டில் புலமைக் கலையே சிறந்தது என அடிகள் எடுத்துக் காட்டியிருந்தார். அதனால் தமிழ்ப் புலமைத் திறத்தையே நான் மேன்மேலும் பெருக்கி வந்தேன்.

பல்லாவரம் சென்றேன் :

1920 ஆம் ஆண்டின் இறுதியில் ஒரு நாள் 'பல்லாவரம் செல்வதே சரி' என்று ஒரு துணிச்சல் எழுந்தது; பிற்பகல் 4 மணி இருக்கும்; பல்லாவரத்தில் அடிகளார் மாளிகைத் தோட்டத்தில் மெல்ல நுழைந்தேன்.

நல்ல காலம் போலும்! அடிகளார் தமது மாளிகையின் முன் தாழ்வாரத்தில் கட்டைச் சுவர்மேல் எதிர்முகமாகத் தனியாய் அமர்ந்திருந்தார். ஏதோ ஓய்வாகப் படித்துக்கொண் டிருந்தார். அத்தகைய அமர்த்தலான நிலையை இறுதிவரையில் அவர்கள் வாழ்க்கையில் நான் பார்த்ததே இல்லை; அடியேற் கென்றே ஒருநாள் மட்டும் அவ்வாறு அமர்ந்திருந்தார்கள் போலும்!

அடிமேல் அடிவைத்துத் தாழ்வாரத்திற் சென்று நின்றேன்; அடிகளையே உற்றுநோக்கிக்கொண் டிருந்தேன்; உள்ளம் 'திக்' 'திக்' என்று அடித்துக்கொண்டது. திருப்பெருந்துறை யிற் குருந்தமர நிழலில் வீற்றிருந்த குருதேவரை, மாணிக்க வாசகப் பெருமான் கண்டுகொண்ட முதல் நிலையில், அவர் இப்படித்தான் உள்ளம் நிலைகொள்ளாமல் தத்தளித்திருப் பாரோ!

'யார்?' என்று ஒரு நீச்சொலி அடிகளிடமிருந்து எழுந் தது. அடிகள் குரலினிமையை முன்பே கேட்டிருத்தலின், அவ்வினிமையில் ஓரளவு மகிழ்ந்து திளைத்தேன். கையுறையாக எடுத்துச்சென்ற நாரத்தம் பழம் இரண்டைச் சுவர்மேல் திருவடிக்கருகில் வைத்துத் தரையில் இருந்த மிதியடிகளையுஞ் சேர்த்துக் கீழ் விழுந்து வணங்கிக் கொண்டேன். அத் திருவடி யின இணைகளே நாளும் எனக்கு வழிபடு பொருளாயின.

'எங்கிருந்து வருகிறாய்?'

'சைதாப்பேட்டையிலிருந்து' என்று திக்கித் திக்கிச் சொன்னேன்.

'என்ன செய்தி?'

'இராயப்பேட்டைப் பேரவையில் பார்த்தேன்; 'ஓங்கார விளக்கம்' கேட்டேன், இரண்டாம் நாளும் 'சைவ சமய மாட்சி' கேட்டேன்; தமிழும் சைவமும் பயில விருப்பம் பெருகிவிட்டது' என்று விட்டு விட்டுச் சொல்லி ஏதோ ஒரு சுமையை இறக்கி வைத்ததுபோல உணர்ந்தேன்; உடம்பு வியர்த்தது.

'பெயர் என்ன?'

'பாலசுந்தரம்; சைதையில் ஆசிரியர் பயிற்சியில் இருக்கிறேன்; கிழமையில் இருமுறை வரக்கூடும்.'

'இதுவரையில் என்னென்ன படித்திருக்கிறாய்?'

எனக்கு ஓரளவு துணிவு உண்டாயிற்று; என்றாலும், எங்கே ஏதாவது கேள்விகள் கேட்டுவிடுவார்களோ என்று அச்சமும் எழுந்தது; இனிமேல் என்ன செய்ய முடியும்? எப்படியிருந்தாலும் சொல்லித்தானே ஆகவேண்டும்?

'மதுராந்தகத்தில் பள்ளித் தமிழாசிரியர் குமரகுரு செட்டியார்; அவரிடம் பதினெண் கீழ்க்கணக்குகள் ஒவ்வோரளவு படித்ததுண்டு; வீட்டில் நானே பெரும்பாலும் படித்துக்கொண்டேன்; சென்னையில் மயிலை சிவ. முத்துக்குமாரசாமி முதலியாரிடம் இரண்டு மாதங்கள் 'திருமுருகாற்றுப்படை'யில் ஒரு பகுதி படித்து வந்தேன்; அடிகளைப் பார்த்ததுமுதல் வேறு நினைவு ஓடவில்லை; அடிகள் நூல்களையே பார்த்து வருகிறேன்.'

'இலக்கணப் பயிற்சி?'

'தனியாக எதுவும் பாடங்கேட்டதில்லை.'

'ஆங்கிலம்?'

'சில தொடர்கள் தெரியும்.'

'உணவு எப்படி?'

'சைதையில் உணவகத்தில் உண்கிறேன்; பயிற்சிக்குச் சிறு ஊதியம் உண்டு; தந்தையார் ஊர்க் கணக்கர்; அவரால் என்னை இங்கே சேர்க்கமட்டும் முடிந்தது; அடிகளைக் காணும் நற்பேறும் அவராற் கிடைத்ததென்றுதான் சொல்லவேண்டும்; தாயார் மாணிக்கம்மாள்; இருவரும் சிவநேயர்கள்; திருக்கழுக்குன்றத்து இறைவரையே வழுத்துவார்கள்; எந்நேரமும் என் தந்தையார் 'வேதகிரி நாதா', 'வேதகிரிநாதா' என்றே சொல்லிக்கொண்டிருப்பார். எனக்குத் தமக்கை ஒருவரும் தம்பி ஒருவரும் தங்கை ஒருவரும் உண்டு. மரக்கறியே உண்டு பழக்கம்.'

'பயிற்சிப் பாடங்களில் தேர்ச்சிபெற வேண்டாமா? இங்கும் வந்துகொண்டிருந்தால் எப்படி?.

'அவை எளிமையாயிருக்கின்றன; வகுப்பிற் கேட்பதே போதும்.'

'ஒரு திங்கட்கிழமை மாலையில் வா; நன்னூல் தொடங்கலாம்.'

எனக்கு உள்ளூர ஒரே மகிழ்ச்சி; தலை கால் தெரியவில்லை; முடவனுக்குக் கொம்புத்தேன் கிடைத்தால், வறியவனுக்குப் பெரும் புதையல் அகப்பட்டால், குருடனுக்குத் திடுமெனப் பார்வை தெரிந்தால், காட்டில் வழிதெரியாமல் அலைகின்றவனுக்கு ஒருவர் எதிர்ப்பட்டு வழிகாட்டினால், கடலில் கரை காணாமல் தத்தளிப்பவனுக்கு ஒரு மரக்கலம் அருகிலுற்றால் எப்படி யிருக்கும்! திகைப்புடன் சிறிது பொழுது அங்கேயே நின்றுகொண்டிருந்தேன்.

இதற்குள் உள்ளேயிருந்து அம்மையார் வந்தார்கள்.

'யார் சாமி?'

"பாடங் கேட்கவேண்டுமாம்; சைதையிலிருப்பதனால் கிழமைதோறும் வரமுடியுமாம்; சைவப் பிள்ளை; அடக்கமிருக்கிறது; அறிவும் இருக்கிறது; எளிய குடும்பம்; 'உரைகோளாளன்' என்று நன்னூலில் சொல்லுவார்கள்; அந்த வகையில் அமையலாம்; 'நம் திருக்கழுக்குன்றத்துப் பெருமானே தெய்வமாம்."

என் உருகிய தோற்றத்தைக் கண்டு அம்மையார்,

'நன்றாப் படிப்பியா? நிலையா இருப்பியா?' என்று பேரன்பு பெருகக் கேட்டார்கள். ஒன்றும் சொல்ல வாய் எழவில்லை; ஊமைபோல் அடிகளைப் பார்த்தேன்.

இருவரும்,

'பால் ஏதாவது வேண்டுமா?' என்று கேட்டு என்னை ஒரு வகையாக அந் நினைவிலிருந்து எழுப்பினர்; கொண்டு வந்த பின், அம்மை அடிகளின் 'அருளமுது' எனக் கருதிச் சிறிது பருகினேன்.

அம்மையப்பராகிய அவர்கள் திருமுன் ஐந்துமணிவரையில் இருந்துவிட்டு விடை பெற்றுக்கொண்டேன்.

சைதை வந்ததும் நடந்தனவெல்லாம் அன்பர் குப்புசாமியிடமும் நண்பர் இராசமாணிக்கத்திடமும் ஆராமையாய்ச் சொன்னேன்; 'பரவாயில்லையே' என்று பாராட்டினார்கள்;

'என்னிடம் ஒரு பேச்சு சொல்லக்கூடாதா? நானும் வந்திருப்பேனே' என்று குப்புசாமி குறைப்பட்டார்.

மறுவாரமே திங்கட்கிழமை ஒரு விடுமுறை வந்தது; பல்லாவரம் சென்று அடிகளை வணங்கி, 'நன்னூல்' பாடங் கேட்கத் தொடங்கிவிட்டேன்.

பயின்ற நூல்கள் :

'நளவெண்பா'வை நீயே படித்துவா; ஐயங்கள் இருந்தால் கேட்டுக்கொள்.'

என்று அடிகள் கூறினார்கள்; எனக்கு ஐயம் எதுவும் அப்போது தோன்றவில்லை; நளவெண்பாவின் சொற்சுவை பொருட்சுவைகளில் நன்கு திளைத்தேன்; செய்யுட் சிறப்புகளை அடிகளுடன் அவ்வப்போதும் உரையாடி மகிழ்வேன்; மேன் மேலும் நலங்காண்பேன்; அடிகள்பால் எழுந்த அன்பு, எனக்கு எல்லாம் விளக்கஞ்செய்துகொண்டிருந்தது!

'நன்னூல்' படிப்பதற்குள் 'நளவெண்பா' 'நைடதம்' 'பெரிய புராணம்' 'திருவிளையாடல்' முடித்தேன்; 'சிலப்பதிகாரம்' 'படிக்கலாம்' என்றார்கள்; அடிகள் தெரிவித்தபடி, சென்னைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்குச் சென்று ஒரு நூல் விலைக்கு வாங்கினேன்; அங்கேதான் எப்போதும் எல்லாப் பதிப்புக்களும் தட்டாமற் கிடைக்கும். அடிகளாரிடம் கொடுத்து வணங்கி அவர்கள் ஆசிகூறப் பெற்றுக்கொண்டேன்.

சைதைப் பயிற்சி முடிந்தது; என் ஊர் அருகில் எண்டத்தூர் நகரில் சில மாதம் ஆசிரியராயிருந்து, பின்பு சூணம்பேடு குறுநில மன்னர் அருணசல முதலியார் அழைப்பின்மேல் அவ்வூர் சென்று அவர் உயர்தொடக்கப் பள்ளியில் தலைமையாசிரியராய் அமர்ந்தேன்; அந்த ஊர் என் ஊர்க்கு 16-கல் தொலைவில் இருக்கிறது;

இலக்கணத்தில் தொல்காப்பியமும் இலக்கியத்தில் சிலப்பதிகாரமும் உரையுடன் பயிற்சிக்கு எடுத்துக்கொண்டேன்; வரி விடாமற் பயின்றேன்; தொல்காப்பியம் முடிவதற்குள் சங்க இலக்கியங்கள் பலவும் பயில நேர்ந்தது.

விடுமுறைக் காலங்கள் :

அதுமுதல் விடுமுறைக் காலங்களிற் பல்லாவரம் சென்று வருவது வழக்கமாயிற்று. கிழமைதோறும் அடிகளைக் கண்டு வணங்கிக்கொண்டிருந்த எனக்கு, இப்போது இரண்டு மூன்று திங்களுக்கொருமுறை பார்ப்பதென்பது மிகப் பெரிய இடை.

யிடாய் இருந்தது. மூன்று நான்கு நாள் தொடர்ந்து 'அரசு விடுமுறை' 'நன்னுள் விடுமுறை'கள் கிடைத்தாலும், பல்லாவரம் சென்று வருவேன். அடிகளைப் பார்க்காத நாளெல்லாம் எனக்குப் பிறவாத நாளாகவே தோன்றும். என் மனநிலையோடு ''பேசாத நாளெல்லாம் பிறவா நாளே'' என்று ஓதிய அப்பர் மன நிலையையும் ஒப்பவைத்து எண்ணிப் பார்த்தால், சிறிதும் வேறுபாடு தோன்ருது!

குனம்பேட்டில் இருந்தபோது, அதற்கு அருகில் இருக்கும் மாக்காணத்திற்கு நான் அடிக்கடி சென்று வருவதுண்டு. சிங்காரவேல் முதலியார் என்னும் குறுநில மன்னர் ஒருவர் அங்கிருந்தார். அவர் இளவல் கணபதி முதலியார்; இருவரும் சிவநேயச் செல்வர்கள்; சோமசுந்தர நாயகர் அக் குடும்பத்திற் சில நாட்கள் தங்கியிருக்கிருர்; நாயகர் நூல்களும் அடிகளார் நூல்களும் அங்கு இருக்கும்; தமிழ் சைவக் காதலால் எனக்கும் அக் குடும்பத்துக்கும் தொடர்பு உண்டாயிற்று; நெருங்கிய பழக்கமும் ஏற்பட்டது. மூத்தவர் இல்லத்தில் தங்குவது வழக்கம்; நள்ளிரவு 1-மணி வரையிற்கூடச் 'சித்தாந்தம்' பற்றியும் 'தமிழ்மொழி' பற்றியும் நாங்கள் பேசிக்கொண்டிருப் போம். அடிகளார் நூல்களை எழுத்தெண்ணிப் படித்துக்கொண் டிருப்போம்.

சிங்காரவேல் முதலியார்க்கு இடைக்கழி நாட்டில் சில ஊர்கள் சொந்தம்; அங்கே தென்னை மா பலா முதலிய மரங்கள் தோப்புகள் தோட்டங்கள் மிகுதி, நான் விடுமுறையிற் பல்லா வரம் செல்லும்போதெல்லாம் அடிகளுக்குப் பயன்படும்படி, முதலியார், மிகச் சிறந்த பெரிய பலாப் பழங்கள் வருவித்துக் கொடுப்பார்; நான் ஆராமையாய் எடுத்துச் செல்வேன்; பலா நுனை மரங்களில் மிதியடிகளும் செய்து எடுத்துக்கொள்வதுண்டு.

தனிப் பெருங் காதல் :

பல்லாவரத்தில் என் பெரிய தாயார் இல்லத்தில் உணவு கொள்வது வழக்கம்; அவர்கள் வைணவர்கள்; அவ்வுணர்ச்சி மிகுதியால் சைவர்களாகிய எங்களோடு அவ்வளவாகத் தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. இவ் வேறுபாடுகளிலெல் லாம் நான் கருத்திருத்துவதில்லை;

அடிகளார் தொடர்பு ஒன்றே எனக்கு உயிர்; வேறு எதுவும் உயர்வாகத் தோற்றுவதில்லை; பெரிய செல்வர்கள் பெரிய கல்வியாளர்கள் யாரைப் பார்க்க நேர்ந்தாலும், பெரிய முயற்சிகள் பெரிய பதவிகள் தொழில்கள் நிகழ்ச்சிகள் எவையே யாயினும், எல்லாரையும்விட எல்லாவற்றையும்விட, அடிகள்

சேர்க்கையே எனக்குப் பெரிதாகத் தோற்றும்; 'அடிகளார் மாணவன்' என்பது இணையற்ற பெரிய நிலை என்று அப் பேறு கருதிச் செம்மாந்து செம்மாந்து மகிழவேன்.

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு, குடிகெடினும்
நள்ளேன் நினதடியாரொ டல்லால், நரகம்புகினும்
எள்ளேன் நின்திருவரு ளாலே இருக்கப்பெறின், இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லால் எங்கள் உத்தமனே!"

என்னுந் திருவாசகத்தின் கருத்து எதுவோ, அதுவே எனது நிலை!

"ஊரும் சதமல்ல, உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல, பெண்டிர் சதமல்ல, பிள்ளைகளும்
சீரும் சதமல்ல, செல்வம் சதமல்ல தேசத்திலே
யாரும் சதமல்ல நின்தாள் சதம்கச்சி யேகம்பனே"

என்னும் பட்டினத்தார் பேருணர்வும் (திருவேகம்ப மாலை 12) என் உணர்வும் ஒன்றே!

அடிகள்மாட்டுச் செய்யும் அன்பொன்றே எனக்கு உயிர்ப்பு! அன்றும் இன்றும் ஒரே நிலைதான்! இதுவே, தமிழ்க் காதல், சிவநெறிக் காதல், பொது மறைக் காதல், பொது நிலைக் காதல், குருகுலக் காதல், கழுகுபதிக் காதல்! எல்லாம் ஒரே தெய்வக் காதலாக எனக்கு அமைந்துவிட்டன! வேறு உணர்ச்சி யொன்றும் எனக்கு எப்போதும் ஏற்பட்டதில்லை. இவ்வுலகில் என்னை ஆட்கொண்டு வாழ்வித்துவரும் எல்லாம் வல்ல முழு முதற்சிவம், இங்ஙனமெல்லாம் துலங்கிவருகின்றது!

அடிகள் இன்று இவ்வுலகில் இல்லை; 15-9-1950இல் மறைந்துவிட்டார்கள்; ஆயினும், எனக்கு அவர்கள் காதல் ஒன்றே அருள் ஒளியாய் நாளும் வட்டமிட்டுக்கொண்டிருக்கிறது. திருக்கழுக்குன்றத்தில், திருவருட்குறிப்புப்படி, மாணிக்கவாசகப் பெருமானால் குருபீடமாக வைக்கப்பட்ட முழுமுதற் சிவத்தின் திருவடிகளே எனக்கு இவ்வுலகில், ஆசிரிய அடிகளாய்த் திருவுருக்கொண்டு எழுந்தருளினமையால், முதலில்வெள்ளியாற் செய்து திருவடிகளை வழிபட்டு வந்தேன்; பின்பு அவற்றை வேதாசலம் என்னும் திருக்கழுக்குன்றப் பெம்மான் திருப் பெயரையே உடைய சென்னைத் 'தொண்டர்மணி' வேதாசல செட்டியார் என்பவர் தாமே முன்வந்து, பொன்னாற் செய்து வழங்கினர்;

என்ன வியப்பு! அடிகள் பெயரும் 'வேதாசலம்', திருவடிகள் தந்து வழிபாடு செய்க என்றவர் பெயரும் வேதா சலம்! திருக்கழுக்குன்றத்துப் பெருமானால் தோன்றியவர்

அடிகள், அத் தலம் குருபீடத் திருவடித் தலம்! அது, அடியேற்கும் குருவை அமைத்தருளியது! என் பெற்றோர்க்கு வேதமலைப் பெருமானே இறைவன்; அவர் தவம் பலித்தது!

தென்னாட்டிற் பாடல் பெற்ற தலங்களிலெல்லாம் அத் திருவடிகள் வழிபடப்பட்டு வந்தன. அருவத்துக்குத் திருச்சிற்றம்பல வெளியும், அருவுருவத்துக்குச் சிவலிங்கத் திருமேனியும், உருவத்துக்கு இத் திருவடியிணையும் என் வழிபாட்டுக்கு நாளும் உரியவாயிருக்கின்றன. ஆசிரியரடிகளிடம், ஒருநாள், நான் அவர் வழிபாட்டறையிற் சென்று திருநீறு பெற்றுக்கொண்டேன்.

1920ஆம் ஆண்டில் என் 16 வது வயதில் ஏற்பட்ட தமிழ் நெறிக் காதலால் என் வாழ்வு நாளும் தளிர்த்து வருகிறது. 1936ஆம் ஆண்டு வரையில், அஃதாவது என் 32 ஆம் வயது வரையில் 16 ஆண்டுகள் அடிகளிடம் தொடர்பாகத் தமிழ் பயிலும் பேறு கிடைத்தது; என் வாழ்க்கையில் இது, இரண்டாம் பகுதி; முதல் 16 ஆண்டுகள் என் பெற்றோர்பாற் பழகிய பகுதி! அடுத்த 16 ஆண்டுகள் அடிகள் நூல்களிலும், நூல் நடைகளிலும் கருத்துக்களிலும் இயக்கங்களிலும் திளைத்து விளையாடிய மூன்றும் பகுதி; அதற்கும் அடுத்த 16 ஆண்டுகள் அடிகள் நெறி தழுவிக் குருகுலம் அமைத்துச் 'சமய விசேட திருவாண ஆசாரியாபிடேகம்' நடந்து குருகுலத் திருமடத்தில் திருக்குறள் பீடம் ஏறித் திருக்குறட் செங்கோல் ஏற்றுக்கொண்ட நான்காம் பகுதி! எனக்கு இப்போது வயது 72; இந்த ஐந்தாம் பகுதி நாளும் அருளில் திளைத்திருக்கும் இன்ப அமைதிப் பகுதி! இவையெல்லாவற்றுக்கும் மூலமாய், மிகச் சிறந்த ஊற்றமாய், என் வாழ்க்கையில் அமைந்தது, அடிகளார் மாட்டு இயற்கையாக எழுந்த தனிப் பெருந் தெய்வத் தமிழ் நெறிக் காதலேயாகும்!

அன்புப் படிப்பு :

ஆசிரியர் மாணவர் படிப்பு என்பது, ஆசிரியரிடம் மாணவர் கொள்ளும் அன்பு என்பதே எனது தெளிந்த முடிபு.

ஆசிரியர் பாடம் சொல்லும் முறையிலோ, மாணவர் படித்துக்கொள்ளும் திறத்திலோ, புலமை அமைவது ஒரு பங்கானால், ஆசிரியர் மாணவரிடையே எழுகின்ற உண்மையன்பே புலமையைப் பல மடங்கு நிறைத்துவிடும் பெற்றியதாய் இருக்கிறது; ஒரு கோடி எடுத்துக் காட்டினால், ஒரு சொல் திருத்துச் சொன்னால் போதும், அன்பிருந்தால் ஒன்றுக்குப் பத்தாக எல்லாம் தாமே உள்ளொளியாய் விளங்கிவரும்.

"ஒருமொழியே பலமொழிக்கும் இடங்கொடுக்கும், அந்த
ஒருமொழியே மலம்ஒழிக்கும் ஒழிக்கும், என மொழிந்த
குருமொழியே மலையிலக்கு; மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்கும் கண்டாய்;
கருமொழியிங்கு உனக்கில்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுஉனைக் காட்டவுங் கண்டனை"
—(தாயுமான. நினைவொன்று, உ)

ஒருவரே ஆசிரியர் :

ஒரு பிறப்புக்குப் பெற்றோர் ஒருவரே அமைவது இயல்பு! அப்படியே எனக்கு ஆசிரியரும் ஒருவர்! ஆசிரியர் என்று என் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிக்கு அடிகள் ஒருவரே உரியவரானார். திருக்கோவையார் போன்ற அகப்பொருள் நூல்களில் ஒருவனே தோழன்; ஆயத்தார் பலர் இருப்பினும் ஒருத்தியே தோழி!

"உயிர்ஒன்று உளமும் ஒன்று ஒன்றேசிறப்பு இவட்கு என்னொடு
என்னப்
பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள் விண்வாய்ச்
செயிர்ஒன்று முப்புரம் செற்றவன் தில்லைச்சிற் றம்பலத்துப்
பயில்கின்ற கூத்தன் அருளென லாகும் பணிமொழிக்கே"

அம்பலவன் அருளே இவ்வாறு அமைவது. இதனை அருளிச் செய்த மாணிக்கவாசகர்க்கும் ஒருவரே குரு!

சிலர்க்கு நூலுக்கோர் ஆசிரியர் இருப்பர்; அந்நூலைப் பாடஞ் சொல்வதில் அவரே வல்லவர் என்பது காரணம்! எனக்கு அப்படி யெல்லாம் இல்லை; எல்லா வகையான நூல்களிலும் தெளிவு பெற அடிகள் ஒருவரே வல்லவராய்ச் சுடர்வீசி விளங்கினர்.

சிலர்க்குப் போதகாசிரியர் வேறு; அவர் நூலாசிரியராய் அமைவது அருமை; உரையாசிரியராய் ஓங்குவது இன்னும் அருமை; பதிப்பாசிரியர் இதழாசிரியர் விரிவுரையாசிரியராய் விளங்குவது அதனினும் அருமை! மேலும், சமயாசிரியர் ஞானசிரியர் முதலிய நிலைகளிலெல்லாம் திகழ்வதென்றால் அஃது எத்துணை அருமை! எனக்கு எல்லா ஆசிரியருமாக அடிகளே அமைந்துவிட்டார்கள்!

ஆசிரிய நிலைகள் மட்டும் இங்ஙனமல்ல; மாணவ நிலைகளும் பலவகை; கல்லூரி மாணவர், தனிமையிற் பயிலும் மாணவர், ஐயங்கேட்கும் மாணவர், ஆராய்ச்சி மாணவர், கொள்கை மாணவர், தவம் பழகு மாணவர், நட்பாடு மாணவர், மதிப்புக் கருது மாணவர், பின்பற்று மாணவர், பொதுநிலை

மாணவர், பணிவிடை மாணவர், தொண்டு மாணவர் என நிலைகள் பல. அடிகளுக்குத் தமிழக முழுதும் தமிழ் வழங்கு நாடுகளிலெல்லாம் இந்நிலைகளுக்குரிய மாணவர்கள் எத்தனையோ பலர் வாய்த்திருந்தனர், இருக்கின்றனர்! இவ் வெல்லா வகையான மாணவ நிலைகளும் நான் ஒருங்கே உடையவனானேன்.

'கல்லூரி மாணவர்' என்னும் நிலை மட்டும் எனக்கு வாய்க்க வில்லை; அடிகள் கல்லூரியிலிருந்து விலகியபோது (10-4-1911) சரியாக எனக்கு வயது 7; நான் பிறந்தது 10-4-1904 இல்! கல்லூரி நூல்களான "முல்லைப்பாட்டு" 'பட்டினப்பாலை" ஆராய்ச்சியுரைகளை அழுந்திப் பயின்ற காரணத்தால் அவ்வகைப் பேற்றையும் நான் ஒருவகையில் பெற்றுக்கொண் டேன். அடிகளே ஒருகால் மலைக்கொழுந்து பிள்ளை என்னும் என் உறவினரிடம் என்னைப் பற்றிப் பேசியபோது இளவழகனது திறனறிவு கல்லூரிக் கல்விக்குச் சளைத்ததன்று! என்று சொன்னதை அவர் பலரிடமும் பலகாலும் சொல்லிச் சொல்லி இன்புற்று வந்தார்.

ஆசிரியர் திறத்தில் எனக்குள்ள அன்புக்கு ஓர் அடையா ளம் கூறவேண்டுமானால், ஒன்று சொல்லலாம்.

"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து"

என்பது.

"எனக்கும் உனக்கும் இசைந்த பொருத்தம்
என்ன பொருத்தமோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக்கு
எய்தும் பொருத்தமோ!"

என்னும் இராமலிங்க அடிகளின் திருவருட்பா அடிகளே அடிக்கடி என் நினைவுக்கு வருகின்றன.

மாணவர் பன்னிருவர்:

இனி, எனக்கு 27-ஆவது வயது நடந்துகொண்டிருந்த போது, அதற்கு முன்பே மெய்கண்ட நூல் 14ம் ஓரளவு பயின்றிருந்தேனாயினும் அடிகளிடம் 'சிவஞானபோதம்' பாடம் கேட்டுக்கொண்டபோதுதான், ஏதோ ஒரு தனி உலகத்தில் நிலவுவதுபோல் உள்ளம் களிதுளும்பியது. ஆலந்தூர் சோம சுந்தர முதலியார் முதலிய பதினொருவர் என்னுடன் அமர்ந்து சிவஞானபோத மெய்ப்பொருளைப் பாடம் கேட்டனர். அப்போது சித்தாந்த நூல் மாணவர் என்னுடன் பன்னிருவர்!

சிவஞானபோதம் பன்னிரண்டு நூற்பாக்கள்; நாங்களும் பன்னிருவர்!

மாணவர் பன்னிருவர் என்பது, அடிகளுக்கு ஒரு பெரிய நோக்கத்தை எழுப்பியது. 'தொல்காப்பியனாருடன் ஒரு சாலை மாணவராகப் பனம்பாரனார் முதலியோர் பயின்றனர் எனவும், தொல்காப்பியருடன் சேர்த்து அம் மாணவர் பன்னிருவராய் விளங்கினர் எனவுங் கூறுப. அங்ஙனம் 'இக் காலத்திலும் பன்னிரு மாணவர்க்காவது உண்டி உடை உறையுள் கொடுத்துத் தமிழும் தமிழ்நெறியும் நாளும் கற்பிப்பதற்கு நிலையான அமைப்பு இன்றியமையாதது' என்று தெரிவித்தார்கள். அடிகள் திருவுள்ளத்தெழுந்த அக் கருத்து நிறைவேறும் வகையில், 'குருகுலம்' இப்போது நடந்து வருகிறது; குருகுலத்தில் 'புலவர் கல்லூரி'யும் இருக்கிறது! அவர்களுக்குத் தனி உணவகமும் உண்டு.

பாட முறை :

அடிகளார் பாடம் சொல்லுவது விரிவாய் இராது; இன்றியமையாத இடங்களில் மட்டும் சுருக்கமாகச் சிறப்புரை கூறுவார். அதுவே பளிச்சென்று நூற்பா முழுவதையும் விளக்கி விடும் பேரொளியாய் இருக்கும். அடிகள், இலக்கணக் குறிப்புக்களும் தொட்டுக் காட்டுவார்; இலக்கியப் பாடம் கேட்கும்போது, அன்றும் முன்பும் படித்த இலக்கணக் குறிப்புக்களைப் பொருத்திப் பார்க்க வைத்து இலக்கண அமைதிகளைத் தெளிவிப்பார்கள். இலக்கணம் படிக்கும்போதும் இலக்கியங்களை இயைத்துக் காட்டுவார். கேள்விகள் கேட்டுத் தெரிந்து கொண்ட அளவு திட்டப்பட்ட பின்பே மேற் கருத்துக்களைக் கூறுவார். ஒரு பாடலுக்கு ஒருநாள் பாடம் கேட்டாற்போதும்; ஒரு முறை விளக்கம் சொன்னால், அது பல நூல்களுக்கு உதவுவதாயிருக்கும்;

மொத்தத்தில் பாடநேரம், பெரும்பாலும் அரை மணியே நிகழும்; மிகுதியானால் ஒரு மணி நேரத்துக்குமேல் போகாது; அதில் அடிகளார் வாய்மொழி கால்மணி நேரந்தான் கேட்கும் மாணவர், தாமே மற்றவைகளைச் சிந்தித்துக் கொள்ள வேண்டும். பாட நேரத்திற் பெரும் பகுதி மாணவர்க்குச் சிந்தனை யுழைப்புத் தருவதே அடிகள் திறம்!

கட்டுரைத் திருத்தம் :

கட்டுரைகள் திருத்துவதும் இங்ஙனமே; அடிகள் சில வரிகளே திருத்திக் காட்டுவார். ஒவ்வொரு சொல்லும் பெய்யும் இடத்துக்குத் தேவைதானா என்று கவனிப்பார்; உணர்ச்சி

களையும் கருத்துக்களையும் மிகுத்துரைப்பதைப் பொதுவாக அவர் விரும்பமாட்டார்; அளவாக இருக்கவேண்டும் என்றே அறிவுறுத்துவார். மேற்கோள்கள் மிகப் பழையனவாய் இருக்க வேண்டும்.

தமிழின் பழைமையிலும் சொற்பொருட் சுவையிலும் அடிகட்குக் கருத்து மிகுதி; சங்கத் தமிழ்த் தொடர்களென்றால், அவற்றின் இயற்கை வெளிப்பாட்டையும் தமிழ் அழகையும் பாராட்டிப் பொன்போற் பெய்து வர இசைவார். சந்திகள் சேர்த்துக் கூட்டி எழுதுவதிற் சுவை காண்பார்; தமிழின் சிறப்பெழுத்துக்களாகிய ழ, ற, ன போன்றவை மிகுந்து வர வேண்டும் என்றும் அவை விரவி வரவேண்டும் என்றும், உரிய இடங்களில் ஆய்த எழுத்தை நழுவவிடக் கூடாது என்றும், 'ஃ' என்னும் அவ்வெழுத்தின் இன்றியமையாமையை முன்னோர் மறவாமற் பயன்படுத்தி வந்தனர் என்றும், அத்தகைய இடங்கள் 'அஃறிணை' என்பதிற்போல இன்னின்னவை என்றும் அடிகள் திருத்திக் காட்டுவார்.

தமிழ் மரபும், பழைய மரபும், இலக்கண அமைதிகளும் கட்டாயம் காத்துவர வேண்டும் என்பதும் அவர் கருத்து; தமிழ்ச் சுவை என்பது அவ் வகையில் துளும்பி நிற்கின்றதென்று கூறி, அச் சிறப்பிற் சிறிது நேரம் அடிகள் தேங்கி யின்புறுவதும் வழக்கம்.

செய்வினை செயப்பாட்டு வினைகளில் செய்வினையாய் வரும் எழுத்தே இயல்பானதுஎன்றும், 'படு' 'பெறு' என்னும் விகுதிகள் துணைவினைகள் போன்றவற்றை இடம் தெரிந்து இயைக்க வேண்டும் என்றும், அடிகள் கருதுவார். 'புத்தகம்' என்பது அஃறிணையாதலால், 'கட்டப்படும்' என்று 'படு' விகுதி சேர்க்கலாம்; கட்டப்பெறும் என்பது பிழை' எனக் காட்டுவார்; உயர்திணைக்கானால் 'அவர் பாராட்டப்பெற்றார்' என எழுதலாம் என்பார். ஏனென்றால், பெறும் தகுதி உயர்திணைக்கே உண்டு. வருமொழி உயிரெழுத்தோடு தொடங்கினால் 'ஓர்' எனவும், மெய்யெழுத்தோடு வந்தால் 'ஒரு' எனவும் எண் பெயர் இட வேண்டும் எனவும், உயர்திணையாயின் அதனை அடுத்தும் அஃறிணையாயின் முன்னும் இடலாம் எனவும் திருத்துவார். சாரியைகளின் இன்றியமையாமைகளிலும் பொருத்தங்களிலும் அடிகளார் மிகவும் நோக்குடையவர்; தொல்லாசிரியர் நல்லானைகளைக் கடைப்பிடிப்பதே அவர்க்குப் பிடிப்பு!

இங்கு இச் சுவை முறைகளையெல்லாம் தொகுத்தெழுதுவது இன்றியமையாததேயாயினும் இக் கட்டுரை மிகவும் விரிந்து விடுமாதலால், அவற்றையெல்லாம் அடிகள் எழுத்தில் வைத்தே வேறொரு கட்டுரையில் எடுத்துக் காட்டுவேன்.

எழுதும் எழுத்துக்களையும் அடிகள் திருத்துவதுண்டு; 'ர்' என்பதைக் கால் வாங்கி எழுதியிருந்தால், அச்சில் அப்படியிருக்கிறதா என்று பார்க்கச் செய்வார். கையெழுத்து அச்சுக்கோப்பதற்கு ஏற்றபடி தனித்தனியாக எழுதவேண்டும் என்று தெளிவிப்பார். சில வரிகள் ஒருநாள் திருத்திக் காட்டினாலும், எப்போதைக்கும் அவையே உதவும்.

திருவடிக் காணிக்கை:

கட்டுரைகள் திருத்தும் அழகில் ஊறிவந்த போது, ஆசிரியர் இயற்றிய செய்யுள் நூல் ஒன்றுக்கு அவர்கள் உவக்குமாறு ஓர் உரை எழுதி அடிகளுக்குத் திருவடிக் காணிக்கையாக வைத்து வணங்கிக்கொள்ள வேண்டும் என்று எனக்குள் ஓர் எண்ணம் எழுந்தது. அடிகளிடம் கல்வி பயின்றதன் அடையாளமாக அஃது அமைய வேண்டுமென்றும், அடிகள் எந்த வயதில் அதனை யாத்தார்களோ அதே வயதில் உரையும் எழுதவேண்டும் என்றும் உள்ளம் எழுச்சிகொண்டது; அடிகளார் என்னிடம் வேறு காணிக்கையொன்றும் எப்போதும் விரும்பியதில்லை.

அடிகளிடம் கருத்தைப் புலப்படுத்தினேன்; 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை'யைக் கொடுத்து இதற்கு உரை வகுக்கலாமே என்றார்கள். பாடம் கேட்டேன்; நினைவுக் குறிப்பன்றி வேறு குறிப்பு வைத்துக் கொள்ளவில்லை. திருவருள் என் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தது; 21இல் தொடங்கி என் 23ஆம் வயதிற்குள் உரை முடிக்கும் பேறு பெற்றேன்! அடிகளுக்கு அவ்வுண்மையைத் தெரிவித்தேனாயினும், விரைவில் அதனை அடிகளிடம் சேர்த்துவிட உள்ளம் இடந்தரவில்லை. உரையில் இரண்டோரிடங்கள், சில மேற்கோள்களைப் பார்த்தெழுதும் பொருட்டு, ஏறக்குறைய இருபது வரிகளுக்கு விளக்கம் எழுதாமல்விடப்பட்டிருந்தது. அடிகளே கேட்டபோது, 1932இல் என் 28ஆம் வயதில் அப்படியே கொடுத்து விட்டேன். விடுபட்ட பகுதிகளைக் கவனித்து எழுத அப்போதும் வாய்ப்பில்லாமற் போயிற்று. அச்சிட்ட காலங்களில் நான் என் ஊர்ப்பக்கத்தில் இருக்க நேர்ந்தது; இறுதியில், 'சொற்பொருட் குறிப்புக்கள்' ஏறத்தாழ 50-பக்க அளவுக்கு மட்டும் பல்லாவரம் சென்று எழுதிக் கொடுத்துத் திரும்பினேன்.

நூல் முழுதும் ஆசிரியரடிகளே தம்முடைய பல பணிகளினிடையே மிக்க உழைப்பெடுத்துப் பெரும் பொருட்செலவில் திருத்திப் பதித்து வெளியிட்டபின், பார்க்க மகிழ்ச்சியாகவும், 'பதிப்புக்குப் பயன்படாமற் போனோமே' என்று உருக்கமாகவும் இருந்தது; 'என்ன ஆகுமோ' என்று அஞ்சியிருந்த எனக்கு,

நூற்றுக்குத் தொண்ணூறு பங்குக்குமேல் என் உரைக் கூறுகள் ஆசிரியரால் ஒப்புதல் பெற்றிருந்தமை, எனக்குப் பெரிய ஆறுதலும் மன நிறைவும் அளித்தது. 'உரை கோளாளன்' என்று ஆசிரியர் எளியேனை வகை பிரித்து ஏற்றுக்கொண்டதற்கு, என் கடமை ஏதோ ஒரு வகையில் அமைந்தமை, நான் பெறற்பெறற்கரும் பேறே என நாளும் எண்ணிவருகின்றேன்.

நூற் காணிக்கை என்பது இங்கே பெரிதன்று; நல்லிசைப் பெரும் புலமை மிக்க ஆசிரியப் பெருமானது நூலொன்றுக்கு ஒன்றுக்கும் பற்றாத இவ்வெளிய மாணவன் உரையென்று ஏதோ ஒன்று குழறிக் குதப்பி அதை ஆசிரியரே ஏற்குமாறு செய்து கொண்ட நற்பேறுதான், நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் அனைத்தெலும்பும் உள்நெகுவதாயிருக்கின்றது!

இனிமை நட்டும் :

1927-ஆம் ஆண்டின் இறுதியில், என் 24-வது வயதில் சென்னைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் கழகப் புலவராய் அமர நேர்ந்தது; பல்லாவரம் அடிக்கடி போகவும் அடிகளாரைக் காணவும் வாய்ப்புப் பெருகியது! அதனால் எனக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

விடுமுறைகளிற் பல்லாவரம் சென்ற காலங்களிலும், அப்போதும், இரவு 9½ மணிக்கெல்லாம் நான் படுத்துக்கொள்ள வேண்டுமென்று அடிகள் சொல்வார்கள். நள்ளிருள் 1-மணிக்கு அடிகளே இசைபாடி எழுப்புவார்கள். அரைமணி நேரம் அல்லது முக்கால் மணி நேரம் தாழ்வாரத்தில் உலாவிக் கொண்டே, 'திருச்சிற்றம்பலக் கோவையார்' செய்யுட்களை, அந்த அமைதியான நேரத்தில், தமது குயிலனைய இனிய குரலில், இசை மிழற்றிப் பாடி, அதன்பின் சந்தி பிரித்து விளக்கமும் உள்ளுறையும் நயங்களும் சொல்லுவார்கள்; திருச்சிற்றம்பலக் கோவையாரை ஒவ்வொரு நாளும் நள்ளிருட் காலத்திலேதான் நான் பாடங் கேட்டுக்கொண்டேன்.

அடிகள் கட்டளைப்படி, நீலாம்பிகையார்க்கும் திருநாவுக்கும் சில வேளைகளில் நான் பாடம் சொல்வதும் உண்டு.

அடிகளிடம் பாடம் கேட்கும் நாட்கள், இன்ப உலகில் இருப்பதுபோல் இருக்கும்; நேரம், பாடம் படிப்பதுபோல் இராது; ஏதோ இன்ப உரையாடல் போலவே இனிமைதட்டும்; புலமை புலகம் முழுதும் அப்போது அங்கே வந்து அடிப்படும். எனக்கு 16 ஆண்டுகள் இம்முறையில் இன்பமாய்க் கழிந்தன.

———

(தொடரும்)

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்.ஸி.]

சங்கநூல்களில் பலவகை மீன்களைப்பற்றிய இயற்கையான செய்திகள் வருகின்றன. இந்த மீன்கள் அறிவியற்படி எவை என்று ஆராய்வது பயன் தரும். சங்கநூல்களில் கூறப்பட்ட சில மீன்களின் பெயர்கள் இன்று வழக்கு வீழ்ந்துவிட்டன. சில பெயர்கள் மாறிவிட்டன. சில சங்கநூற் பெயர்கள் மலையாளம் முதலிய பிற திராவிட மொழிகளிலே காணப்படுகின்றன. அயிலை என்ற மீனின் பெயர் அகநானூற்றில் வருகின்றது. இன்று இப்பெயர் தமிழ்நாட்டில் வழங்குவதில்லை. ஆனால் மலையாளத்தில் யாவருக்கும் தெரிந்த மீன் பெயராக வழங்குகின்றது. தமிழ்நாட்டில் மீன்களின் பெயர்கள் இடத்திற்கு இடம் மாறுவதுண்டு. தமிழ்நாட்டில் பல இடங்களில் சுதும்பு என்று அழைக்கப்படும் மீனைத் திருநெல்வேலி, நாஞ்சில் நாட்டுப் பகுதிகளிற் குதிப்பு என்றழைக்கின்றனர். மழைக்காலத்தில் இந்த மீன் நீரிலிருந்து குதித்து விழுவதால் குதிப்பு என்ற பெயர் வந்தது. இந்த மீனைப் பள்ளு நூல்கள் குறிப்பிட்டுள்ளன. பள்ளுநூல்களில் வரும் மீன்களின் பெயர்கள் நாட்டு மக்கள் வாயில் வழங்கும் பெயர்களாகப் பெரும்பாலும் உள்ளன. இப்பெயர்கள் இடத்திற்கு இடம் மாறுகின்றன. பெயர்கள் மாறியும் திரிந்தும் வழங்குவதால் சங்ககாலப் பெயர்களைத் தெளிவாகத் தெரிந்துகொள்வது எளிதன்று. மீனவர்களிடையே மீன்களைப்பற்றியும் மீன்களைப் பிடிப்பதுபற்றியும் அரிய, சிறப்பான வழக்குகள் காணப்படுகின்றன: மீனவர்கள் கடற் பரப்பில் நன்செய், புன்செய்களைக் காட்டுகின்றனர். மீன்களுக்கு வேண்டிய உணவுப்பொருள் இன்றி வெறு மணல் தரையுடைய நீர்ப்பரப்பைப் புன்செய் என்றும், பாறைத் தரையாகவும் பாசி முதலிய உணவுப்பொருள் இருக்கும் நீர்ப்பரப்பை நன்செய் என்றும் அழைப்பர். மலையாளத்தில் கடல்நீர்ப்பரப்பில் இருக்கும் பாறை போன்ற தடைகளை 'முட்டு' என்றழைக்கிறார்கள். கடலில் எங்கெங்கு முட்டுகள் உள்ளன என்று கண்டறிந்த மீனவரே மீன் பிடிக்கச் செல்வர்.

> "நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
> கன்முதிர் புறங்காட் டன்ன
> பன்முட் டின்றாற் றோழிநங் களவே." —அகம், 122.

புறங்காட்டில் கற்கள் தடையாக இருப்பதுபோல 'பல முட்டுகளை' உடைய களவொழுக்கத்தைப்பற்றித் தலைவி சொல்வதாக அகநானூற்றுப் பாட்டு குறிப்பிட்டுள்ளது. இந்த அகநானூறில் வந்த 'முட்டு' என்ற சொல்வழக்கு அப்படியே மலையாள மீன

வர்களிடையே வழங்குவதைக் கேட்கும்போது வியப்பு மேலிடு கிறது. தமிழ்நாட்டு மீனவர்கள் கடலில் மீன் பிடிக்கும்போது பெரிய வலைகளைக் கடற்பரப்பில் குறிப்பிட்ட இடங்களில் போட்டு வைப்பர். இந்த இடங்களைக் கரையில் உள்ள மரங்கள் முதலிய பொருள்களைக் கொண்டும் வானத்தில் காணும் உடுக்களைக் கொண்டும் நான்கு திசையிலும் குறிப்பு வைத்துக் கொண்டு கடற்பரப்பில் கண்டுபிடிக்கின்றனர். இவ்வாறு பார்த்துக் குறிப்பு வைப்பதற்குக் 'கணியன்' என்று கூறுவர். சங்கநூல்களில் கணியன் என்ற சோதிடவல்லார் இருந்தனர். அவர்கள் வானத்தில் காணப்படும் கோள்களையும் உடுக்களை யும் கணித்துக் காலத்தைக் குறித்தனர். கணியன் என்ற சங்க கால வழக்கின் பொருளை மீனவர் பேச்சு வழக்கிலும் காண் கிறோம். சிதம்பரத்திற்கருகில் வாழும் மீனவர்களின் பேச்சு வழக்குகளை ஆராய்ந்த அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆராய்ச்சி யாளர் ஒருவர் பதினாறு உடுக்களின் பெயர்களை மீனவர்கள் கூறுவதைக் குறிப்பிட்டுள்ளார். கணியனைப் போல மீனவர் களும் வானத்தில் உள்ள உடுக்களைக் கண்டு காலம், இடம் ஆகியவற்றைக் கண்டுகொள்கின்றனர். பதினாறு வகைக் காற் றின் பெயர்களையும் ஏழுவகை நீரோட்டத்தின் பெயர்களையும் பத்துவகை மணல்வகைப் பெயர்களையும் இந்த மீனவர்கள் சொல்லுகின்றார்கள் என்று அந்த ஆராய்ச்சியாளர் கண்டுள் ளார். இவற்றை யெல்லாம் அறிவியற்படி எவையென்று ஆராய்வது பயன் தரும். சங்கநூல்களில் கூறப்பட்ட மீன் களின் பெயர்களையும் மீனவர்களின் பேச்சு வழக்கில் காண லாம். சங்கநூல்களில் இருபதுக்கு மேற்பட்ட மீன்வகைகள் கூறப்பட்டுள்ளன.

1. அயிலை

அயிலை என்ற மீனைப்பற்றி அகநானூற்றில் இரண்டு பாடல்களில் சொல்லப்பட்டுள்ளது. இது கடல்நீர் மீனாகும்.

"கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
இரும்புலாக் கமழுஞ் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்க ணவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்க ணயிலை பகுக்குந் துறைவ"

—அகம், 70

கோடிக்கரை அருகில் சிறுகுடிப்பாக்கத்தில் இருந்த பரதவர் குறுங்கண்ணையுடைய வலையால்பிடித்த கொழுங்கண்ணையுடைய அயிலைமீனைப் பகுத்துக் கொடுத்து மகிழ்ந்தது கூறப்பட்டுள் ளது. அயிலைமீனைத் தற்காலத்தில் தமிழ்நாட்டில் காணுங் கெளுத்தி என்ற பெயரால் அழைக்கின்றனர். இப்பெயர்

தெலுங்கு மொழியில் 'கானகுர்த்தா' என்று வழங்குகின்றது மராத்தி மொழியிலும் இதுபோன்ற பெயர் வழங்குகின்றது. இந்தப் பெயர் தமிழுக்குப் பிற்காலத்தில் வந்ததாகத் தெரிகின்றது. ஆனால் மலையாள நாட்டில் இன்றும் அயிலை என்ற சங்க காலப் பெயரால் அழைக்கின்றனர். அயிலை மீனை மலையாளிகள் மிகவும் விரும்பி உண்கின்றனர். ஆனால், தமிழ்நாட்டில் இந்த மீனை அவ்வளவு சிறந்த உணவாகக் கருதுவதில்லை. மலையாள மொழியில் 'ஆளியனுக்கு அயிலை' என்றொரு பேச்சு வழக்கு உள்ளது. அயிலை மீனை மருமகனுக்குக் கொடுக்க வேண்டும் என்று பொருள்படும் இந்த வழக்கிலிருந்தே அயிலை மீனை எவ்வளவு அருமையானதாகக் கருதுகின்றனர் என்பது புரியும். அயிலை மீனைச் சங்ககாலத்தில் தமிழரும் சுவையுடையதாகக் கருதியிருக்கவேண்டும். அயிலை மீன் கடலில் பெருங் கூட்டமாகப் பிடிபடும். சங்கநூல்களிலும் அயிலை மீனை 'இன மீன்' என்று அழைப்பதைக் காணலாம். இனம், கணம் என்ற அடைமொழிகள் சங்கநூல்களில் கூட்டத்தைக் குறித்து வழங்குவதைப் பார்க்கலாம். இந்த மீனே ஆங்கிலத்தில் மேக்கெரல் (Mackerel) என்றழைப்பர். இந்த மீன் கேரளக்கரையிலும் தமிழ் நாட்டுக் கரையிலும் சில காலங்களில் பெருங் கூட்டமாகக் கிடைக்கின்றன. இப்படிக் கூட்டமாகக் கிடைக்கும் மீன்களில் மத்தியும் (Sardines), அயிலையும் மீனவர்களின் வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமானவையாகும். எலிமிச்சம்பழப் புளிச்சாறுடன் தேங் காய்ப்பால் சேர்த்துக் கூட்டிய குழம்பில் அயிலைமீனைப் போட்டுச் சமைத்து மலையாளிகள் உண்பது வழக்கமாக உள்ளது. 'மோளி' என்றழைக்கும் இந்தப் புளிக்குழம்பை மலையாளிகளின் சிறந்த சமையல் முறை என்று கூறுவர். சங்ககாலத்திலும் அயிலை மீனைப் புளியுடன் சேர்த்து உண்ணும் வழக்கத்தை அகநானூறு குறிப்பிட்டுள்ளது.

"உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த வம்புளிச் சொரிந்து
கொழுமீன் றடியொடு குறுமகள் கொடுக்கும்." —அகம் 60.

'அயிலை துழந்த அம்புளி' யென்பது அயிலை மீனொடு சமைத்த புளிக்குழம்பாகும். மீனைப் புளிக்குழம்பில் போட்டுச் சமைப்பது இன்றும் தமிழநாட்டில் காணப்படும் வழக்கமாகும். அயிலை என்ற பெயர் வேலைக் குறிக்கும். வேல் போன்ற உருவுடன் இந்த மீன் காணப்படுவதால் அயிலை என்று அழைக்கப்பட்டிருக்கலாம். அயிலைமீனை ஆங்கிலத்தில் Mackerel என்றழைப்பர். அறிவியலில் (ரேஃச்டிரேலிகர் கனகுர்தா) (Rastrelliger Kanagurta) என்றழைப்பர்.

## 2. அயிரை

அயிரை என்ற மீனைப்பற்றிச் சங்க நூல்களில் சில பாடல்கள் கூறியுள்ளன.

"குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாங்குச்''
—குறுந்தொகை 128.

"தன்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மரந்தை'' —குறுந்தொகை 166.

"அயிரை பரந்த வந்தண் பழனத்
தேந்தெழின் மலர தாம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட்டாங் கிவள்''
—குறுந்தொகை 178.

"குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயி னிடையது'' —புறம் 67.

"கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
இருஞ்சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டந் துழவுந் துறைவன்'' —நற்றிணை 272.

"நீரறன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை யயிரைப் பொருந''
—பதிற்றுப்பத்து 21.26—29

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி மருங்கி னயிரை யாரும்'' —ஐங்குறுநூறு 164.

"முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்''
—பதிற்றுப் பத்து 29. 3—6

"சிறிய பொருள் கொடுத்துச் செய்த வினையால்
பெரிய பொருள்கருது வாரே-விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு
வராஅல் வாங்கு பவர்.'' —பழமொழி 373.

அயிரை என்ற மீன் மிகச் சிறிய மீன் வகையாகும். தற்காலத்தில் இதை அசரை என்றழைக்கின்றனர். வற்றிய குளங்களிலும் குட்டைகளிலும் தண்ணீரை இறைத்துப் பிடிப்பர். இந்த மீன் ஆறுகளிலும், குளங்களிலும், குட்டைகளிலும் வாழும். இது நன்னீர் மீன் ஆகும். குறுந்தொகைப் பாடலில்

தொண்டி முன்றுறையில் அயிரையை உண்ண, கிழக்குக் கடலில் இருந்த நாரை விரும்பியதாகக் கூறப்பட்டுள்ளது. தொண்டியின் கடற்கரைத்துறையில் அயிரை மீன் இருந்ததாகக் கொள்ளக்கூடாது. ஆற்றுத் துறையில் அயிரை மீன் இருந்ததாகக் கருத வேண்டும். குமரியம் பெருந்துறையில் அன்னம் அயிரையை விழுங்கினதாகப் புறநானூறு கூறுவது குமரியாற்றுத் துறையில் இருந்த அயிரைமீனைக் குறித்ததாகும். அயிரை நீர் நிறைந்த வயல்களிலும் கழிகளிலும் இருந்ததாகச் சங்கநூல்கள் கூறியுள்ளன. அயிரை மீனைக் கொக்கும் நாரையும் கடற்காக்கையும் காட்டு வாத்துக்களும் விரும்பி உண்டதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. அயிரை மிகச் சிறிய மீனுகையால் பறவைகள் விழுங்குவதாகக் கூறினர். நீர் குறைந்த இடத்தில் கொக்கு அயிரை மீனை வேட்டையாடும் என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. நீரற்றபோது சேற்றில் ஓடி ஒளியக்கூடிய அயிரை மீனைக் கொக்கு உண்பதாகக் கூறியது இயற்கையான செய்தியாகும். நீர் வற்றிச் சேறு நிறைந்த இடங்களில் கொக்குகள் உட்கார்ந்து மீன்களை வேட்டையாடுவதைக் காணலாம். 'இருஞ்சேற்று அயிரை' என்று சேற்றில் காணப்படும் அயிரை மீனை நற்றிணை தெளிவாகக் கூறியுள்ளதைக் காணலாம். சிறிய அயிரை மீனைத் தூண்டிலில் வைத்துப் பெரிய வரால் மீனைப் பிடிப்பதை ஒரு பழமொழியாகக் கூறியுள்ளனர். அயிரை என்ற பெயர் அயிர் என்ற சொல்லிலிருந்து வந்தது. அயிர் என்ற சொல் நுண்ணியதைக் குறிக்குமென்று திவாகரம் கூறியுள்ளது. நுண்ணிய மீனுகையால் அயிரை என்றழைக்கப்பட்டது. அயிரை மீனை ஆங்கிலத்தில் லோச் (Loach) என்றும் அறிவியலில் கோபிற்றே (Cobito) என்று கூறுவர்.

**3. ஆரல்**

சங்க நூல்களில் ஆரல் என்ற மீனைப்பற்றிச் சில பாடல்கள் கூறியுள்ளன.

> "ஒழுகுநீ ராரல் பார்க்கும்
> குருகு முண்டுதான் மணந்த ஞான்றே."—குறுந்தொகை 25.
>
> "ஆர வருந்த வயிற்ற
> நாரை மிதிக்கு மென்மக ளுதலே."—குறுந்தொகை 114.
>
> "பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை
> கதிர்மூக்கு ஆரல் கள்வ னுகை
> நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்" —அகம் 246.

ஆரல் மீனை இக்காலத்தில் ஆராமீன் என்றழைக்கின்றனர். ஆரல் மீன் நன்னீர் மீன்வகையாகும். ஆரல் மீன் ஆறுகளிலும் உப்பங்கழிகளிலும் காணப்படும். இந்த மீன் மண்ணிலும்

சேற்றிலும் புதைந்துகொள்ளும் தன்மையுடையது. சேற்றில் ஒளிப்பதையும் நீர் கழிந்த சேற்றில் இருப்பதையும் சங்கப் பாடல்கள் கூறியுள்ளன. இதற்கு மூக்கு நீளமாகவும் கூர்மையாகவும் உள்ளது. அம்பின் முனை போன்று கூர்மையாக உள்ளதால், நீண்டு உள்ளதால் கதிர்மூக்கு ஆரல் என்று புறநானூறும் அகநானூறும அழைத்துள்ளன. நாரையும் குருகும் கொக்கும் ஆரலை விரும்பி உண்பதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. கொக்கின் பிள்ளை கடுகு போன்ற ஆரலின் முட்டையை உண்டதாகப் புறநானூறு கூறியிருப்பது அரிய இயற்கைச் செய்தியாகும். மனிதர் ஆரல் மீனைச் சுட்டு விரும்பி உண்டதாகப் புறநானூறு கூறியுள்ளது. ஆரல் கருவாடு சுவை உடையதாகக் கருதப்படுகின்றது. ஆரல் தடியை நெருப்பில் சுட்டுத் தின்றதையும் புறநானூறு கூறியுள்ளது. ஆரல் மீன் சுவையான மீனாகும். ஆர்வதற்குச் சுவையுடைய மீன் ஆதலால் ஆரல் என்ற பெயர் வந்திருக்கலாம். ஆரல் மீனை ஆங்கிலத்தில் சாண்ட்ஈல் (Sand eel) என்றும் அறிவியலில் ரைஞ்சோடெல்லா அக்குலீட்டா (Rhynchobdella aculeata) என்றுமழைப்பர்.

*"நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்*
*பூக்கதூஉ மினவாளை*
*நுண்ணாரற் பருவராற்*
*குரூஉக்கெடிற்ற குண்டகழி"* —புறம் 18,

*"யாமைப் புழுக்கிற் காமம்விட வாரா*
*ஆரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ"* —புறம் 212.

*"கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்*
*கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ"* —புறம் 249.

*"ஆர நெருப்பி னாரல் நாறத்*
*தடிவார்ந் திட்ட முழுவள் ளூரம்"* —புறம் 320.

*"பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை*
*மென்சேற் றடைகரை மேய்ந்துண் டதற்பின்*
*ஆரல் ஈன்ற வையவி முட்டை*
*கூர்ந விறவின் பிள்ளையொடு பெறூஉம்"* —புறம் 342.

*"சேறுபடு செறுவி னுறுபடு கடைசியர்*
*கழிப்புநீ ராரலொடு கொழுப்பிருக் கொளீஇய*
*நாரைச் சேவல் பார்வலொடு வதிந்த"*
—பெருங்கதை-4; 41—43

*"கமுனி யாரல் கவுளகத் தடக்கிப்*
*பழன மருதிற் பார்ப்புவாய் சொரிந்து*
*கருங்கா னாரை நரன்றுவந் திறப்பத்"*
—பெருங்கதை-7; வரி 29—31.

(தொடரும்)

# தமிழ்நாடு ஆளுநர் உயர்திரு கே. கே. ஷா அவர்கட்குப் பாராட்டு

[ஞா. தேவநேயன், இயக்குநன், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், தமிழ்நாடு அரசு.]

21—9—1975 அன்று, சென்னையில் நிகழ்ந்த, தமிழ் சமற்கிருத ஏனையிந்திய மொழிகள் ஆராய்ச்சிக் களரிக் கருத்தரங்குக் கட்டுரைகளைப் படித்தேன்.

எத்துறையிலேனும், சிறப்பாகத் தமிழ்த் துறையில், ஆராய்ச்சி செய்வதற்கு, மதிநுட்பம், பரந்த கல்வி, நடுநிலை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறியவா என்ற ஆறு திறங்களும் இன்றியமையாது வேண்டும். கருத்தரங்கிற் கட்டுரை படித்தவருள், அல்லது உரை நிகழ்த்தியவருள் தமிழ்நாடு ஆளுநரும் ஓய்வுபெற்ற சென்னை உயரற மன்றத் தலைமை நடுவாளர் உயர்திரு. பி. வி. ராஜமன்னாருமே, இவ்வறு திறங்களையும் உடையவராகத் தெரிகின்றது.

தமிழ் உலகமுதல் உயர்தனிச் செம்மொழி என்பது, ஏற்கெனவே கண்டுபிடிக்கப்பட்ட உண்மை. (Beatertrack).

> "ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
> ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
> மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
> தன்னே ரிலாத தமிழ்."

என்பது பேரறிஞர் ஒருவர் பாடிய பழந்தனிப்பா.

கால்டுவெலார் கிறித்தவ சமயக் குரவராதலால், ஏதேன் தோட்டக் கதையை எழுத்துப்படி நம்பியவர். அதனால், தமிழரின் முன்னோர் வடமேலை நாட்டினின்று வந்தவர் என்னும் கொள்கையர். அவர் காலத்தில், தொல்காப்பியமும், பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் என்னும் கடைக்கழகப் பாட்டுகளும் பனுவல்களும், சிலப்பதிகாரம் போன்ற கழகமருவிய வனப்புக்களும், தலைமைத் தமிழ்ப் புலவர்க்குந் தெரியாது மறைந்து கிடந்தன. அவர்க்கு வழிகாட்ட மறைமலையடிகள் போலும் தமிழ்ப் புலவரும் ஒருவரும் இருந்ததில்லை. ஆயினும், அவர் நடுநிலையாகத் தமிழை ஆழ்ந்து ஆராய்ந்ததனால், அம் மொழி ஆரியத்திற்கு (சமற்கிருதத்திற்கு) முந்தியதென்றும், உலக முதன் மொழிக்கு மிக நெருங்கியதென்றும், அ இ உ என்னும் தமிழ் முச்சுட்டே ஆரிய மொழிகளிலுள்ள சுட்டுச் சொற்கட்கெல்லாம் மூலமென்றும், திட்டவட்டமாகக் கூறியுள்ளார்.

யாழ்ப்பாண ஞானப்பிரகாச அடிகள், 1938இல் தாம் வெளியிட்ட சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி முகவுரையில், "But it was only some ten years ago that the present writer had

the good fortune of stumbling on the fact that DR and I E words were actually derived from the same primitive roots," என்று கூறியுள்ளார்.

இந்திய வரலாற்றுத் தந்தையான வின்சென்று சிமிது (Vinsent Smith), தம் 'முந்திய இந்தியா' (Early India) என்னும் வரலாற்று நூலில், மனோன்மணிய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை கருத்தை முற்றும் ஒப்புக்கொண்டு, இந்திய வரலாற்றைத் தெற்கினின்றே தொடங்க வேண்டுமென்று நெறியிட்டுச் சென்ருர். அதைத் தழுவியே, பி. தி. சீனிவாசையங்கார் 'இந்தியக் கற்காலம் (Stone Age in India), 'ஆரிய முன்னைத் தமிழப் பண்பாடு' (Pre-Aryan Tamil Culture), 'தமிழர் வரலாறு' (History of the Tamils), முதலிய நூல்களும், வி. ஆர். இராமச் சந்திர தீட்சிதர் 'தமிழர் தோற்றமும் பரவலும்' (Origin and Spread of the Tamils) 'வரலாற்று முன்னைத் தென்னிந்தியா' (Pre-Historic South India) என்ற நூல்களும், வெற்றி பெற எழுதிப் போந்தனர்.

கால்டு வேலர்க்குப் பிற்பட்ட மேலை மொழிநூலாரெல்லாம், பேரனைப் பாட்டனுகப் பிறழவுணர்ந்து வரலாறு தீட்டுவார் போல், சமற்கிருதத்தை அடிப்படையாகக் கொண்டு மொழியாராய்ச்சி செய்ததனுல், முட்டுப்பட்டு மதிமருண்டு, "எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே," என்னும் (தொல். பெயர்.1) தமிழ் நெறிமுறைக்கு நேர்மாருக, 'எல்லா மொழியும் இடுகுறித் தொகுதியே,' என்று தம் இரு கண்ணையும் இறுகக் கட்டிக்கொண்டு, ஓர் உயிரியின் தலையும் வாலும் நீக்கி முண்டத்தை மட்டும் வரைந்தாற்போன்று, முன்பின் வரலாற்றை முற்றும் புறக்கணித்து மொழிகளின் இற்றைநிலையை மட்டும் எடுத்துக் கூறும் 'வண்ணனை மொழிநூலை' (Descriptive Linguistics) வளர்த்து, மாணவரையும் ஆசிரியரையும் மயக்கி வருகின்றனர். வண்ணனை, ஒப்பியல், வரலாறு ஆகிய மூவியல்களையும் ஒருங்கே கொண்டதே மொழிநூல்.

'வண்ணனை மொழிநூல்' இலக்கண நூலின் ஒரு கூறேயன்றி, மொழி நூலோ முழு நூலோ அன்று. அவர் கூறும் வரலாற்று மொழிநூல் இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டதேயன்றி, மொழியை அடிப்படையாகக் கொண்டதன்று. மொழி இலக்கியத்திற்கு முந்தியது. இலக்கியத்திற்கும் பிந்தியது இலக்கணம். வெள்ளையர் கூறுவதெல்லாம் விழுமிய அறிவியலன்று.

ஒரு மொழியின் இலக்கியத்தை, (அம்மொழியைத் தாய் மொழியாகக் கொள்ளாத) பிறமொழியாளரும் கற்று முழுத்

தேர்ச்சி பெறலாம். ஆயின், அம் மொழியில் முழுப்புலமை பெறுவது குதிரைக் கொம்பு.

தமிழ் குமரிநாட்டில் தோன்றிய, மிகப் பழைமையான, வரலாற்றிற் கெட்டாத உலக முதன்மொழியாதலின், அதை ஆழ்ந்து ஆராய்ந்து மூலங்காண்பது, தமிழ்ப் பெரும் புலவர்க்கும் அரிதாகும். தமிழையும் திராவிட மொழிகளையும் இருபத்தொன்றென்று கணக்கிட்டு, ஒப்பியல் அகரமுதலி தொகுத்துள்ள பேரா. பரோவும், பேரா. எமெனோவும், ஓரளவு சொற்களைத் தொகுத்தவரேயன்றி அவற்றின் மூலத்தை அல்லது வேர்ப் பொருளைக் கண்டவரல்லர். ஆதலால், அவர் திரவிட அகர முதலி ஒப்பியல் அகர முதலியேயன்றிச் சொற்பிறப்பியல் அகர முதலியன்று. மேலும், அது சென்னைப் ப. க. க. தமிழ் அகர முதலியை (Tamil Lexicon) அடிப்படையாகக் கொண்டதனால் வழுவுற்றது மாகும்.

உலகில் முதன்முதல் தோன்றிய தமிழ் வண்ணமாலை (குறுங்கணக்கு அல்லது நெடுங்கணக்கு) தனியொலியன்களைக் கொண்டதேயன்றி, ஆங்கில வண்ண மாலைபோல் ஓரொலிக்குப் பலவரியும் ஒருவரிக்குப் பல வொலியும் கொண்ட குழறுபடைத் தொகுதியன்று. சென்ற நூற்றாண்டிறுதியில் ஒலியன்களைக் கண்ட மேலை மொழிநூலார், தமிழருக்கு ஒலியன்களைக் கற்பிக்க வந்தது, கொற்றெருவில் ஊசி விற்பதே.

மேலை மொழி நூலாரின் நூல்களைப் படித்தமட்டில், ஒருவர் தம்மை மொழியாராய்ச்சியாளராகக் கருதிக்கொள்வது அறியாமையின்பாற்பட்டதே. படிப்பு வேறு; ஆராய்ச்சி வேறு. படிப்பிற்கும் ஆராய்ச்சிக்கும் உள்ள வேற்றுமை, கடற்கரையில் முத்துச்சிப்பிகளைக் காண்பதற்கும் கடலுள் மூழ்கி அவற்றை எடுத்துக்கொண்டு வருதற்கும் உள்ள வேற்றுமையாகும். பல்லாண்டு பொறுமையுடன் பாடுபட்டுச் செய்ய வேண்டிய மொழியாராய்ச்சியை, ஒன்பான் கிழமை மொழிநூற் பள்ளியிற் பெற்றுவிட முடியாது.

இனம், மதம், மொழி, நாடு ஆகிய நான்கும் எத்துணைப் பேரறிஞர்க்கும் வெறி அல்லது பெரும் பற்று ஊட்டக்கூடிய நெருங்கிய தொடர்புகளாகும்.

தமிழ்நாட்டுப் பிராமணர், தமிழர் துணைகொண்டு தமிழால் வாழ்ந்தும், தமிழரைத் தமக்கும் தமிழைச் சமற்கிருதத்திற்கும் என்றும் அடிப்படுத்தியே வைத்திருக்க வேண்டுமென்று திட்டமிட்டு வேலை செய்து வருகின்றனர். இந்நன்றிக்கேடு இனப்போரைத்தான் வளர்க்கும். கிரேக்கத்திற்கு நெருங்கியதாயிருந்து வழக்கற்றுப்போன கீழையாரிய மொழியும்,

வடநாட்டுப் பண்டை வட்டார மொழிகளாகிய பைசாசி, சூரசேனி, மாகதி என்னும் முப்பிராகிருதங்களும் கலந்ததே வேதமொழியாகும். அவ் வேத மொழியுந் தமிழுங் கலந்ததே, சமற்கிருதம் என்னும் அரைச் செயற்கையான இலக்கிய வகை மொழி (Semi-artificial literary dialect) யாகும். பிராகிருதம் முந்திச் செய்யப்பட்டது; சமற்கிருதம் (சங்கிருதம்) கலந்து செய்யப்பட்டது. இவ்வியல்பை அவற்றின் பெயர்களே தெரிவிக்கும். சமற்கிருதம் ஒருகாலும் பேசப்பட்ட மொழியன்று. இனியேனும் பேசப்படும் மொழியுமன்று. புல்லுருவியும் உண்ணியும்போல், வழக்கு மொழிகளைச் சார்ந்தே அது வழங்க முடியும்.

தொடர்பில்லாத் தனிமொழிகளை வரலாற்று முறையிலும், தொடர்புள்ள இனமொழிகளைக் கொடிவழி முறையிலும், (Geneological method) ஆராய்வதே அறிவியல் முறைப்பட்டதாகும். அம்முறையில் ஆராயின், சமற்கிருதம் தேவமொழியென்றும் பிராமணர் நிலத்தேவரென்றும் கூறும் ஈராரிய (நூற்) கூற்றுகளின் ஏமாற்றும் வெட்டவெளியாகிவிடுமென்றே பிராமணரும் அவரடியாரும் வண்ணனை மொழி நூலை ஏற்றுப் போற்றி வருகின்றனர்.

பிராமணர் பெரும்பாலும் தமிழுக்கு மாறுயிருப்பதால், அவரைக் கொண்டு தமிழை ஆராய்வது, பாலுக்குப் பூனையையும், ஆட்டுக்கிடைக்கு ஓநாயையும் காவல் வைப்பது போன்றதே யாகும். (To set the fox to keep the geese.) தென்மொழி வடமொழிப் பிணக்கைத் தீர்க்க அவரை நடுவராக அமர்த்துவது ஆட்டுக் குட்டிக்கும் நரிக்கும் இடைப்பட்ட வழக்கைத் தீர்க்க, ஓர் ஓரியை அமர்த்துவது போன்றதே (A fox should not be of the jury at a goose's trial)

தமிழர் பிராமணருக்குப் பிறப்பால் தாழ்ந்தவரென்று கடந்த மூவாயிரம் ஆண்டாக ஆரிய நூல்கள் பறையறைந்து வந்ததனாலும், தமிழ மூவேந்தரும் அதை ஏற்று ஆட்சிக்குக் கொண்டு வந்தமையாலும்,

"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்று திருவள்ளுவர் பாடி ஈராயிரம் ஆண்டான பின்பும்; ஆங்கிலர் நடுநிலையாட்சியும் ஆங்கில அறிவியற் கல்வியும் ஒன்றரை நூற்றாண்டும், நயன்மைக்கட்சியின் (Justice party) திரவிடர் முன்னேற்றத் தொண்டும், மறைமலையடிகளின் தனித் தமிழ்த் தொண்டும் கால் நூற்றாண்டும், பெரியாரின் பகுத்தறிவுத் தொண்டு அரை நூற்றாண்டும், நடைபெற்ற பின்பும்; பகுத்தறிவு தன்மானம் நெஞ்சுரம் ஆகிய மூவகைக் கரணவியல்பும்,

பேராசிரியர் உட்பட இற்றைத் தமிழருள் நூற்று மேனி தொண்ணூற்றுவர்க்கு இல்லவேயில்லை.

எல்லா நாடுகளிலும் நாட்டையும் மொழியையும் காட்டிக் கொடுக்கும் இரண்டகர் இருக்கவேயிருக்கின்றனர். ஆயின், அவரின் வெற்றித் தொகை தமிழ்நாட்டிற்கே யுரிய தனிச்சிறப் பாகும். அகக்கரண வலிமையிழந்த அடிமையர்க்குத் தமிழா ராய்ச்சி செய்யுந் தகுதியில்லை.

இந் நிலையில், குசராத்தியரான தமிழ்நாடு ஆளுநர் பெருந் தகைத் திரு. கே. கே. ஷா அவர்கள் தம் பல்வேறு பணிகட் கிடையே தமிழைப் பல்லாண்டு பற்றொடு கற்றாய்ந்து, தமிழ் ஆரியத்திற்கு நெருங்கியதென்றும், சமற்கிருதம் தமிழை வளம் படுத்தியிருப்பினும் தமிழினின்றே தோன்றியதென்றும், நடு நிலையாகவும் துணிந்தும் கூறியும் எழுதியும் வருவது,

> "உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டாம்
> உடன்பிறந்தே கொல்லும் 'வியாதி'—உடன்பிறவா
> மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
> அம்மருந்து போல்வாரு முண்டு"

என்னும் ஔவையார் ஒருவர் கூற்றையே நினைவுறுத்துகின்றது. இதுவரை எந்த் ஆளுநரும் இத்தகைய மொழியாராய்ச்சியோ தமிழ்ப் பணியோ செய்ததில்லை.

(வெண்பாவில் 'வியாதி' என்பது 'பிணிகள்' என்றிருப்பதே பொருத்தமாகும்.)

குச்சரம் (Gujarat) ஒரு காலத்தில் ஐந்திரவிட (பஞ்ச திராவிட) நாடுகளில் ஒன்றாகக் கொள்ளப்பட்டதேனும், இற்றை நிலையில் அஃது ஓர் ஆரிய நாடாகவே கருதப் படுகின்றது. ஆதலால், ஆளுநர் அவர்கள் தமிழிற் பற்று வைக்க எவ்வகை இயற்கைத் தொடர்புமில்லை.

ஆகவே, உண்மைத் தமிழர் அனைவரும், உடனே தனிப் பட்ட முறையிலோ, கழக மன்றச் சார்பிலோ, ஆளுநர்க்குப் பாராட்டு விடுப்பதுடன், கலைஞர் முதல்வர் அவர்கட்கு, தமிழ் சமற்கிருத ஏனையிந்திய மொழிகள் ஆராய்ச்சி முடியும்வரை, தமிழ்நாட்டிலேயே ஆளுநர் அவர்களை இருத்திக் கொள்ள வேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தலும் வேண்டும்.

சிறப்பாக, உலகத் தமிழ்க்கழகக் கிளைகளெல்லாம் இதை உடனே நிறைவேற்றுதல் வேண்டும்.

இது தமிழுக்கு உயிர் நாடியான செய்தி என்பதை உணர்ந்து கொள்க. தமிழ்நாட்டின் உச்சநிலை அதிகாரியான ஓர் அயல் நாட்டார் இங்ஙனம் தமிழைக் காக்க வந்தது, இறைவன் பேரருள் என்றே துணிந்து வழுத்துக.

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கீ. இராமலிங்கனார் எம். ஏ.
தமிழக அரசு ஆட்சிமொழிக்குழு உறுப்பினர்]

General என்னும் சொல்லுக்குப் பொது என்னும் சொல்லையே பெரும்பாலும் பயன்படுத்துவதைக் காண்கிறோம்.

General Hospital ஐ 'பொது மருத்துவமனை' என்கிறோம். 'பொது' என்னும் சொல்லை இங்கே பயன்படுத்துவதற்கு நாமே அமைதியும் கூறிக்கொள்கிறோம். இம் மருத்துவ மனையில் எல்லா நோய்களுக்குமே பண்டுவம் (Treatment) செய்யப்பெறு கிறது. இருமல் மருத்துவமனை, மன நல மருத்துவமனை, தொழுநோய் மருத்துவமனை இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நோய்க்கே முறையே 'இருமல்' 'மன நலம்' 'தொழு நோய்' இவற்றிற்கே மருத்துவம் செய்யப்படுவதுபோல் அல்லாமல் இந்நோய்கள் உள்படப் பொதுவாக எல்லாப் பிணி களுக்கும் மருத்துவம் செய்யப்படுவதால் அது General Hospital எனப் பெறுகிறது. எனவே 'General' என்பதற்குப் 'பொது' என்னும் சொல்லைப் பயன்படுத்துவது பொருத்தமே என்போம்.

அங்ஙனமாயின் சென்னையிலுள்ள இராயபுரம் மருத்துவ மனை, இராயப்பேட்டை மருத்துவமனை, கீழ்ப்பாக்கம் மருத்துவ மனை இவை ஒவ்வொன்றிலும் கூட மேலே குறித்த மூன்று நோய்களுக்கு ஒரே அளவு பண்டுவம் செய்யப்பெறுகிறது. எனவே அவற்றையும் General Hospital என்று சொல்ல வேண்டும். ஆனால். அவ்வாறு சொல்வதில்லை. மாநிலத்தின் தலைமை மருத்துவமனைகள் அவை அல்ல. Govt. General Hospital ஒன்றே அரசின் தலைமை மருத்துவமனையாகும். எனவே அதுமட்டுமே General Hospital எனப் பெறுகிறது.

மாவட்டத் தலைமை நகரங்களிலேயுள்ள மருத்துவமனைகளி லும் ஓரளவு எல்லா நலிவுகளுக்குமே மருத்துவம் செய்யப்பெறு வதால் அவற்றையும் General Hospital என்று கூறக்கூடும். சிலர் அப்படிக் கூறுவது உண்டு. ஆனால், மாவட்டத் தலைமை மருத்துவமனை என்னும் பொருளிலேயே இவை General Hospital எனப்பெறுகின்றன. இருமல் போன்ற தனிவகைப் பிணி களுக்கும், ஓரளவு அங்கே மருத்துவம் செய்வதனால் அவை General Hospitals என்னும் பெயர் பெறவில்லை.

எனவே, மருத்துவமனைகளைப் பொறுத்த மட்டில் General என்னும் முன் அடை 'தலைமை' என்னும் பொருளிலேயே இருப்பதை அறியவேண்டும். General Hospital என்னும் தொடர் எங்கே வந்தாலும், 'தலைமை' மருத்துவமனை என்று சொல்வதே பொருத்தமாகும். 'பொது' மருத்துவமனை என்னும் தொடர் பொருந்தாது.

General க்குத் 'தலைமை' என்னும் ஒரு பொருளும் உண்டு. அந்தப் பொருளிலேயே General Hospital என்னும் தொடரில் General என்னும் சொல் ஆளப்பெற்றிருக்கிறது.

General Kumaramangalam என்பதைப் பொது குமார மங்கலம் என்று சொல்லலாமா? 'தலைமைத் தளபதி குமார மங்கலம்' என்பதே அதற்குப் பொருத்தமான பொருள் அல்லவா? Inspector General, Director General, General Secretary, or Secretary General, General Manager என்னும் எல்லாத் தொடர்களிலும் General என்பதற்குத் 'தலைமை' என்றே பொருள். இவற்றிற்கு முறையே 'தலைமை ஆய்வாளர்' 'தலைமை இயக்குநர்; 'தலைமைச் செயலர்; 'தலைமை மேலாளர்' என்பனவே தமிழாகும்.

Inspector General of Police என்பதில் Inspector என்பதற்கு இப்போது ஒரேபொருள் சொல்வதில்லை. ஒருகாலத்தில் காவல்துறையில் கீழ்நிலையில் Inspector க்கு மேலான அலுவலர்கள் இல்லாமல் இருந்தனர். Inspector....களுக்கு மேல் Inspector General மட்டுமே இருந்தார். அப்போது Inspector General க்குத் தலைமை ஆய்வாளர் என்று கூறினோம். காவல் துறையில் ஆய்வுப்பணி செய்பவர்களுக்குத் தலைவர் என்றும் சொல்லலாம். Inspector...க்குமேல் Dy. Superintendent, Superintendent முதலிய பெயர்கொண்ட அலுவலர்கள் அமர்த்தப்பெற்ற பின்பும் காவல் துறையின் தலைவருக்கு Inspector General என்னும் பெயரே வழங்கி வரலாயிற்று. இன்று Inspector General of Police க்கு 'காவல்துறைத்தலைவர்' என்று சொல்லவேண்டும். எப்படியும் General என்பதற்குத் 'தலைவர்' என்னும் பொருளே இங்கும் உண்டு. பொது என்னும் பொருள் இல்லை.

Inspector General of Registration க்கும் மேற்கண்ட விளக்கமே பொருந்துவதாகும். Inspector General of Prisons க்கும் அங்ஙனமே இத்தொடர்களுக்கு முறையே 'பதிவுத் துறைத் தலைவர்' 'சிறைத்துறைத் தலைவர்' என்று சொல்ல வேண்டும்.

General...என்னும் சொல் இன்னும் பலவகையான பொருள்களில் பயன்படுத்தப்படுகிறது. கீழே காணும் தொடர்களைப் பார்க்க.

General Matter

ஒன்றைப் பற்றியோ, ஒருவரைப் பற்றியோ அல்லாமல் பெரும்பாலன பற்றிய பெரும்பாலாரைப் பற்றிய செய்தி.

General Impression

பரவலான கருத்து, பரவலான சிந்தனை.

General Interest

குறிப்பிட்ட நடுவரது நலம் அல்லது விருப்பாக இல்லாமல், பெரும்பாலார் நலம் அல்லது விருப்பம்.

General Knowledge

பல பொருள் அறிவு, ஒருபொருளைப் பற்றிய அறிவு அன்று.

General Election

ஒரு சில தொகுதிக்குமட்டும் அன்றி எல்லாத் தொகுதிகளுக்கும் நடக்கும் தேர்தல்.

General Debility

ஒரு வகையான உரக்குறைவாக இல்லாமல் உடல் மொத்தத்துக்குமான உரக்குறைவு.

General practitioner

ஒரு குறித்த நோய்க்கு மருத்துவம் செய்பவராக இல்லாமல் எல்லா நோய்களையும் கவனிப்பவர்.

General danger

தனித்த ஒருவருக்கு மட்டும் இடராக இல்லாமல் பலருக்கும் விளையக்கூடிய தீங்கு

General Outline

நுணுக்கங்களைப்பற்றிக் கூருமல் பரவலான அல்லது சுருக்கமான குறிப்பு

General Rule

in General எல்லாருக்குமான விதி. வழக்கமானது. வழக்கமாக.

General Provident Fund

சேமிக்கும் தொகைக்கு ஈடாக அரசு உதவித்தொகை வழங்கும் Contribution Provident Fund...ஆக இல்லாமல் அரசு ஈடான தொகை உதவாத வருங்கால நிதி.

மேற்கண்ட எல்லாத் தொடர்களிலும் 'General' என்னும் சொல்லுக்குப் 'பொது' 'பொதுவான' என்னும் சொல்லையே வழங்குகிறோம்.

தொகுத்துப் பார்த்தால் General என்னும் சொல்லுக்கு, 1. பொது, பொதுவான, 2. பரவலான, சுருக்கமான, இயல்பான, சாதாரணமான, வழக்கமான 3. தலைவர், தலைமை என்னும் பொருள்கள் இருப்பதை யறிகிறோம். எல்லா இடங்களிலும் General ஐப் 'பொது' என்று மொழிபெயர்த்தல் கூடாது என்பதும் விளங்குகிறது.

———

# உலோச்சனார் சமணரா?

[பேராசிரியர், ஆ. சிவலிங்கனார், மயிலம்]

திருவனந்தபுரம், கேரளப் பல்கலைக் கழகத்துத் திருவாளர், சி. சத்தியமூர்த்தி அவர்கள், 1975 ஆம் ஆண்டு சூன் திங்கள், 10, 11, 12 தேதிகளில், நாகர்கோவிலில் நடைபெற்ற 'இந்தியப் பல்கலைக் கழகத் தமிழ் ஆசிரியர் மன்ற ஏழாவது கருத்தரங்'கின் வெளியீடாகிய 'ஆய்வுக் கோவை'யில், "உலோச்சனார் பற்றிய சமணச் சிந்தனைகள்" என்ற தலைப்பில் எழுதிய ஆய்வுக் கட்டுரையில், சங்ககாலப் புலவருள் ஒருவ ராகிய உலோச்சனார் என்பவர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்று எழுதியுள்ளார்கள். அதற்கு அவர்கள் காட்டிய காரணங்கள் பொருந்துமா என்று காண்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

1. (1) "நண்டுகளின்மேல் தேர்ஆழி ஏருவாறு நில வொளியில் கடற்கரையைக் கவனித்துப் பாகன் தேர் செலுத்துவது பற்றி இவர் (உலோச்சனார்) பாடியிருப்பது இவரின் கொல்லா நோன்பு பூண்டொழுகும் சமணக் கொள்கையைப் புலப் படுத்துகிறது."

இக் கூற்றில் கொல்லாநோன்பு என்பது சமணக் கொள்கை யென்று கொண்டதால் பிறசமயங்களில் அது கொள்கையாகாது என்பது அவர்கள் எண்ணம்போலும். இது நிற்க. அவர்கள் குறித்த கருத்துள்ள நற்றிணைப் பாடல் வரிகள் வருமாறு :

"புணரி பொருத பூமணல் அடைகரை
ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்பு ஆய்ந்து ஊர
நிலவு விரிந்தன்றால் கான லானே."

இவ் வரிகளில், 'தேர்வலவன் தேர்ச்சக்கரத்தில் நண்டுகள் சிக்காதபடி விலக்கித் தேர்க் குதிரைகளின் வாரை ஆராய்ந்து இயக்கித் தேரைச் செலுத்திய செய்தி' கூறப்பட்டுள்ளது. இதில் சமண சமயக் குறிப்பு என்ன இருக்கிறது? 'பிறவுயிர்க்கு இடையூறின்றித் தேர் கடவிவரச் செய்துவந்தான் தலைவன்' என அவன் குணம் மிகுத்துச் சொல்வதற்காகப் பாடப்பட்ட வரிகள் தாமே அவை? இதுபோன்ற கருத்துகள் சங்க இலக்கியங்களில் மிகுதியும் உண்டு.

'கார்காலம் குறித்துப் பிரிந்து சென்ற தலைவன், கார் காலம் வந்ததாகத் தன்வினை முடித்து மீண்டு வருபவன், தன்

தேரின் மணியோசை கேட்டுப் பொழில்களில் தாதுண்ணும் பறவைகள் அஞ்சியோடாதபடி தேர்மணிகளின் நாவுகளைக் கட்டி ஊர்ந்து வந்த செய்தி' அகநானூற்று நாலாம் பாடலில் உண்டு.

"பூத்த பொங்கர்த் துணையோடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்"

என்பன அக்கருத்தமைந்த வரிகள். 'தலைவன் கொடியவன் அல்லன்' என்று அவனைச் சிறப்பிக்கும் வகையில் இப்படிப் பாடுவது பழம்புலவர் இயல்பே. அதனால் நண்டுச் செய்தி கொண்டு உலோச்சனார் சமணர் என்று சிந்திப்பது பொருந்தாது.

(2) நற்றிணை 278 ஆம் பாடல் உலோச்சனார் பாடியது. அதில்,

"கழிச்சே றாடிய கணைக்கால் அத்திரி
குளம்பினும் சேயிறு ஒடுங்கின
கோதையும் எல்லாம் ஊதைவெண் மணலே"

என்ற வரிகள் உண்டு. "கோவேறு கழுதையின் காற்குளம்பில் சிக்கி இறால் மீன்கள் அழிந்தன" என்பது முன் இரண்டு வரிகளின் கருத்து. நண்டுக்குத் தீங்கு நினையாத உலோச்சனார் இறால் மீனுக்குத் தீங்கு நினைப்பானேன்? இவ்விடத்துத் தலைவன் தன்மைக்கு வேறு வகையில் கருத்து அவர்க்குப் புலப்படாதது ஏன்?

(3) நற்றிணை 363 ஆம் பாடலில், தலைவி தலைவனோடு நண்டினைப் பிடித்தாட்டி விளையாடியதாகப் பாடியுள்ளார். ஆடியபோது தழையுடை சிதைந்தது; மாலை வாடியது; வளையல்கள் கழன்றன; சிலம்புகள் உடைபட்டன; அப்படியானால் நண்டின்கதி என்ன ஆகியிருக்கும்?

"பைந்தழை சிதையக் கோதை வாடச்
சில இலங் த எல்வளை நெகிழ
அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்தனவே"

என்ற வரிகளைக் காணும்போது உலோச்சனாரைச் சமணராகச் சிந்திக்க முடியுமா?

2. "தலைவனின் தேர்க் குதிரைகளுக்கு உணவூட்டும் செய்தியை இவர் விதந்தோதுவது சமணரின் உயிர் இரக்கத்தை உணர்த்துகிறது" (நற். 254)

இப்படி அவர்கள் எழுதியுள்ள கருத்தடங்கிய நற்றிணை 254 ஆம் பாடலின் வரிகள்,

> "உமணர் தந்த உப்புநொடை நெல்லின்
> அயினி மாஇன்று அருந்த"

என்பனவாகும். "உப்பு வாணிகர் கொண்டுவந்த - உப்பு விற்றுப் பெற்ற நெல்லைக் குற்றி அமைத்துக்கொண்ட அரிசி உணவைக் குதிரைகள் உண்ண" என்பது அவற்றின் கருத்து. இதில் உயிர் இரக்கத்துக்கு இடம் ஏது? குதிரைக்கு ஊன் உணவு இடுவது வழக்கம்போலவும் அதை நீக்கி அரிசி உண விட்டதாகக் கூறியது உயிர் இரக்கத்தைக் காட்டுவதுபோலவும் கூறியுள்ளார்கள்.

3. தலைமயிரைத் தாமே பறித்தெடுக்கும் ஒழுக்கத்தைச் சமணர் 'உலோச்சு' என்பர். அதனால் உலோச்சனார் என்ற பெயரைக் கொண்டு அவரைச் சமணர் எனக் கொள்ளலாம் என்ற கருத்தினர் அவர்கள்.

பெரிதும் நெய்தல் ஒழுக்கமே பாடிய உலோச்சனார் தாம் நெய்தல் நிலத்தார் என்பதற்கேற்ப நெய்தல்நிலப் பொருள்களாகிய அலவன், மீன், உப்பு முதலியவற்றைக் கொண்டு நெய்தல் நிலமக்கள் தொழில்களையே பாடியிருத்தலை நோக்கும்போது, அவர்தம் கால நடைமுறைகளையே பாடினார் என்னலாம். அப்படியானால் தலைபறிக்கும் தம் ஒழுக்கம் பற்றி யாண்டும் குறிப்பிடாதது ஏன்? தலைபறித்தோர் எல்லாம் உலோச்சனார் என்றழைக்கப்படவில்லை. இவர் அழைக்கப் பட்டார் என்றால் அவ்வொழுக்கத்தை மிகுதியும் கடைப்பிடித் தவராதல் வேண்டும். வேண்டவே தம் பாடல்களில் எங்காவது அதுபற்றி எந்தவகையிலாவது குறிப்பிட்டிருப்பர். எனவே பெயர் கொண்டு சமணர் என்றல் பொருந்தாது.

4. சமணர் ஒழுக்கங்களாகப் பட்டினிநோன்பு, நீராடாமை, வடக்கிருத்தல் ஆகியவற்றைக் கூறுகிறார்கள்.

நீராடாமை என்பது சமணத் துறவிக்குச் சிறப்பாக இருக்கும். மற்றையன யாவர்க்கும் பொதுவே. 'சல்லேகனை' என்று கூறப்படும் வடக்கிருந்து உயிர்விடும் ஒழுக்கத்துக்கும், ஒரு வஞ்சினம் கருதி-ஒருறுதி கருதி-தோல்வி கண்டு நாணி-வடக்கிருந்து உயிர்விடும் வீர ஒழுக்கத்துக்கும் வேறுபாடு உண்டு. சல்லேகனை என்பது சமணர்க்குரியது. வடக்கிருத்தல் யாவர்க்கும் உரியது. மேற்குறித்த ஒழுக்கங்களுக்கும் உலோச்

சனுர்க்கும் பாடல்கள் மூலம் யாதொரு தொடர்பும் காணப்பட வில்லை.

5. 'சமண ஒழுக்கத்துக்குப் பொருந்தாத தொழில் களை உலோச்சனுர் பாடியிருப்பதால் அவர் சமணர் ஆகார்' என்று கூறுபவர்க்கு மறுப்பாக, மீன் பிடித்தலும் (அகம் 20, 210, நற் 311) கட்குடித்தலும் (நற். 38) ஊன் தின்னுதலும் (புறம் 258.) சமணத்துக்குப் பொருந்தா ஒழுக் கங்களேயாயினும் அகத்திணைப் புறத்திணைப் பாடல் மரபுகள் பற்றி இவரால் பாடப்பட்டிருக் கின்றன.''

என்றெழுதினுர்கள்.

(1) ஒரு சமணர் தம் ஒழுக்கத்துக்கு மாறுபட்ட செய்தி களைத் தாம் பாடிய பாக்கள் எல்லாவற்றிலுமே பாடினுர் என்றல் பொருந்தாது; தம் ஒழுக்கங்களையும் வற்புறுத்தும் நிலையில்—சிறப்பிக்கும் நிலையில் பாடியிருப்பர். அவ்வாறு உலோச்சனுர் பாடவில்லை.

(2) தலைவியொருத்தி தன் ஊரைச் சிறப்பிக்கும்போது ''கொழுமீன் சுடுபுகைமறுகு'' (நற். 311) உடையதாக இருந் தது எனப் பெருமைப்பட்டுக் கொள்கிருள். அது மட்டுமா? நண்டு வளைகளைக் கிண்டி விளையாடினுர்களாம் ஒரு தலைவனும் தலைவியும் (அகம் 20). நெய்தல் நில மக்கள் செயல்களாக வேறு எவையும் உலோச்சனுர்க்குக் கிடைக்கவில்லையோ? கள்ளுண்டு மகிழும் புது வருவாய் பற்றியும் கூறியுள்ளார் அவர் (நற். 38.)

(3) சிந்தாமணி போன்ற சமண காவியங்களில் அவை பற்றி வருகின்றன என்றுல் அவை கதைத் தொடர்புள்ளன; ஊர், நாடு முதலியவற்றின் இயல்பு கூறுமிடத்து வருவது தவருகாது. ஆனுல், தனிப் பாடலில்—கதையில்லாத—தாமே படைக்கும் ஒரு கருத்துப் பாடலில் தம் சமய ஒழுக்கத்துக்கு மாருன கருத்துகளைப் பெய்து வைக்கலாமோ?

6. ''உயிர்க் கொலையை இவர் மனமாரக் கடிந்தவர் என்பதனைக் 'கொலை வெம்பரதவர்' என்ற பாடல் தொடரே காட்டி நிற்கிறது (அகம் 210) என்றெழுதியுள்ளார்கள்.

பரதவர் மீன் பிடித்தொழிலினர் ஆதலின் அவர்களை மீன் கொலையை விரும்பும் பரதவர்' என்பதில் வியப்பு என்ன?

அப்படிச் சொன்னதனாலேயே உலோச்சனார் உயிர்க்கொலையைக் கடிந்தவர் என்று சொல்லிவிட முடியுமா? அழிவு செய்யும் தொழிலைக் 'கொலை' என்ற சொல்லால் பண்டையோர் குறித்தல் இயல்பு. மரவேலை செய்யும் தச்சரைக்கூட "மரங்கொல் தச்சர்" என்றார்கள். எனவே 'கொலை வெம்பரதவர்' என்றதாலேயே உயிர் இரக்கம் பெறப்பட்டுவிடாது.

7. (1) "கடலில் காணப்படும் பல்வகை மீன்களைப் பாடியது பற்றி இவர் பரதவர் மரபினர் போலும் என்பர். பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் அவர்கள். அவ்வாறுயின் போரில் உயிர்க் கொலை புரியும் அரசமரபைச் சேர்ந்த சந்திரகுப்த மௌரியர், இளங்கோ* போன்றோர் துறவியாகியதுபோல பரதவமரபினராகிய உலோச்சனாரும் சமணத் துறவியாக மாறியிருக்கலாம்."

இப்படி யெழுதியதும் பொருத்தம் இல்லை. உலோச்சனார் முதலில் வேற்று சமயத்தாராய் இருந்து பின்னர்ச் சமணர் ஆயிருக்க வேண்டும் என்றால், சமண சமயத்துக்கு மாறவேண்டிய அவசியம் தாம் முன்னர்ச் சார்ந்திருந்த சமயத்தின் நெறி முறைகள்—செயல்கள் ஒவ்வாமையால் அன்றே? அதனால் அவர், கொலை, ஊன்,கள் முதலியவற்றை வெறுத்துத்தானே சமயம் மாறியிருக்க வேண்டும்? அப்படி மாறியவர் அவை பற்றியே தம் பாடல்களில் பாடினார் என்றால் எப்படி ஏற்பது? முரண்பட்ட கோட்பாடாகாதோ ?

(2) வெட்சித்திணை உண்டாட்டுத் துறையில் பாடிய 'முடக்காற்காரை' என்று தொடங்கும் புறப்பாடலில் (258) ஆநிரை கவர வேற்றுப்புலம் சென்ற வீரன் பச்சை ஊனைத் தின்றதாகவும், தின்ற கையைக் கழுவாமல் வில்லின் புறத்தே துடைத்ததாகவும், கள்ளை மிக விரும்பியுண்டதாகவும் பாடியுள்ளார். இப்படி ஊன் உணவையும் கள் உணவையும் போற்றி—ஆதரித்துப் பாடவேண்டுவது சமணர்க்கு அவசியந்தானா? பாட்டுக்காகப் பாடினார் என்றால் சந்தர்ப்பத்துக்கேற்பச் சமய ஒழுக்கத்தை விடும் இயல்பினர் என்பதன்றோ பெறப்படும்? எனவே, உலோச்சனார் சமணத் துறவியாவர் என்று சிந்தித்தலும் பொருத்தமின்றாம்.

இதுகாறும் கூறியவாற்றால் உலோச்சனார் சமணரல்லர் என்பது உறுதிப்படும்.

———

* இளங்கோ சமணத்துறவியல்லர் என்பதை எமது "சிலம்பு மணிகள்" என்ற நூலில் விளக்கியுள்ளோம்.

# பெருந்தலைவரின் பெரும்பயணம்

தமிழக மக்களின் தனிப்பெருந் தலைவரும் காந்தியடிகளின் கொள்கைகளை வழுவாது கடைப்பிடித்து வந்தவருமான திரு காமராசர் அவர்கள் காந்தியடிகள் பிறந்தநாளான அக்டோபர் 2ஆம் நாள் மறைந்தார். இது நாட்டிற்கு ஈடுசெய்ய முடியாததொரு பேரிழப்பாகும்.

அறிவுச் செல்வத்திலும் பொருட்செல்வத்திலும் சிறந்து விளங்கிய குடும்பங்களில் தோன்றியவர்களே அரசியலில் பெருந் தலைவர்களாகத் திகழ முடியும் என்ற நிலை இருந்த காலத்தில் அவ் இருவகைச் செல்வமுமில்லாத, எளிய தாழ்த்தப்பட்ட குடும்பத்தில் தோன்றிய ஒருவர் மிகப் பெருந்தலைவராக உயர்ந் தமை குறிப்பிடத்தக்க செய்தியாகும். கட்சிக்காக உண்மையி லேயே, சொல்லளவிலன்றி அதன் பொருளளவிலும், தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் ஒப்படைத்து, எளிய தொண்டன் நிலையிலிருந்து இந்தியாவின் தலைமைப் பொறுப்பை ஏற்கும் அளவுக்கும் தலைவர்களை உருவாக்கும் அளவுக்கும் உயர்ந்தவர் காமராசர் அவர்கள்.

கட்சியின் உயர்ந்த பொறுப்புக்குச் சென்ற பின்னும் ஏழை மக்களைப் பற்றியும், கட்சியின் எளிய தொண்டர்களைப் பற்றியும் கவலைப்பட்ட ஒரே தலைவர் அவர்.

கட்சியின் முன்னேற்றத்திற்காகத் தம் இல்லற வாழ்க்கை யைத் துறந்த ஒரே அரசியல் துறவி அவர். அகவை முதிர்ந்த, தன்னைப் பெற்ற அன்னை, உடன்பிறந்த தங்கை, அவர் வயிற் றிற் பிறந்த பிள்ளைகள், பேரர்கள் ஆகிய இவர்களைக்கூட, தம் மிடம் இருக்கச் செய்யாமல் தனித்திருந்தே அவர்களிடம் அன்பு காட்டியவர். தம்முடைய இறுதிக்காலத்தில்கூட அவருடன் உற்றார் உறவினர் எவரும் இலர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

தலைமை அமைச்சர் பதவியை விடக் கட்சியின் முன்னேற் றம்தான் முதன்மையானது என்று எண்ணிக் 'காமராசர் திட்டம்' ஒன்றை இந்திய அரசியலில் வகுத்துப் பதவியினின்று தாமே விலகியதோடன்றிப் பிற மூத்த தலைவர்களையும் விலகச் செய்து கட்சியை வளர்த்தவர் அவர்.

நேரு, சாத்திரி போன்ற தலைமை அமைச்சர்கள் மறை விற்குப்பின் இந்திய அரசியற் கப்பல் போட்டிப் புயலில் சிக்கிச் சீரழியும் நிலையிலிருந்தபொழுது, அக்கப்பலைக் கவிழாது காத்த

அரசியல் மீகாமன் அவர். பிளவுபட்ட காங்கிரசுக் கட்சிகள் இணைவதற்கு ஏற்ற காலத்தை உணர்த்தும் விடிவெள்ளியாகத் திகழ்ந்தார் அவர். இன்று அவ் 'விடிவெள்ளி' மறைந்து விட்டது. தடங்கண்டு தானே நடத்திச் செல்லும் தலைவன் மறைந்து விட்டான். தடை பல கடக்கவேண்டிய படைத் தலைவனின்றித் தத்தளிக்கின்றது நாடு.

திரு காமராசர் அவர்கள் காந்தீயத்தில் அசையாத நம்பிக்கை உடையவர். வெறும் புறக்கோலமட்டும் பூணுமல், காந்தியடிகளைப்போல் உள்ளத்தாலும் செயலாலும் அரசியலில் மட்டுமின்றித் தனிப்பட்ட வாழ்க்கையிலும் சீலத்தையும் நேர்மையையும் எளிமையையும் ஒழுக்கத்தையும் கடைப்பிடித் தவர்.

அவர் உயர் கல்வி கற்காவிட்டாலும் கல்வியால் உயர்ந்தோ ரிடம் காணப்படக்கூடிய கண்ணியமும், கடமை உணர்வும், பிற பண்பு நலங்களும் இயல்பாகவே வாய்க்கப் பெற்றவர். நினைவாற்றல் மிக்கவர். கடந்தகால நிகழ்ச்சிகளையும், தாம் உறவாடிய தலைவர்களின் இயல்புகளையும், தொண்டர்களின் உளப்போக்கையும் மறவாமல் கூறும் ஆற்றல் படைத்தவர். எதை—எப்படி—எப்போது செய்ய வேண்டும் என்பனவற்றை முன்னறிவோடு செய்யும் செயல் திறம் இவரிடம் மிக உண்டு. அதனுல்தான் நேரு அவர்களைப் போன்ற பெருந்தலைவர்களும் இவர் கருத்தின்படி நடந்தனர். இவர் ஒரு சிறந்த 'இராச தந்திரி' என்ருல் அது மிகையாகாது.

அனைத்திந்திய அரசியலில் இவர்தம் கருத்துகள் எப்படி யிருந்த போதிலும் தமிழகத்தைப் பொறுத்த அளவில் இவருக்குத் தமிழ் நாட்டிடம் தனிப்பற்றும் தமிழர்களின் முன்னேற்றத்தில் தனி ஆர்வமும் இருந்து வந்தன. தாய் மொழியிலேயே எல்லா இடங்களிலும் ஆட்சி நடைபெறுதல் வேண்டும் என்பதிலும், பள்ளி கல்லூரிகளிலும் எல்லாப் பாடங் களும் தமிழிலேயே கற்றுக் கொடுக்கப் பெறவேண்டுமென்பதி லும் அழுந்திய ஆர்வமுடையவர். அதனுல்தான் தமிழகம் இவரைப் 'பச்சைத் தமிழர்' என்று போற்றிற்றுப் போலும்.

இவர் சார்ந்த கட்சியினர் மட்டுமின்றி எதிர்க்கட்சியினரும் இவரை விரும்பினர் என்பதற்கு எத்தனையோ எடுத்துக் காட்டுகள் உள. பெரியார் அவர்களும், அறிஞர் அண்ணு அவர்களும் இவரைப் போற்றிப் புகழ்ந்தனர் என்ருல் அதில் பொருளில்லாமற் போகுமா?

இங்ஙனம் எல்லாத் துறைகளிலும் நல்லவராக-வல்லவராக-நம்மவராகத் திகழ்ந்த காமராசரின் மறைவு பொதுவாக இந்தியத் துணைக் கண்டத்திற்கும், சிறப்பாகத் தமிழ்நாட்டிற்கும் பேரிழப்பாகும் என்பதைக் கூறவும் வேண்டுமோ! அவர் மறைந்துவிட்ட போதிலும் அவர் காட்டிய வழிகள் நன்கு செப்பனிடப்பட்ட வழிகளாகும். நாமும் அவ்வழியில் செல்வதே அன்னாருக்கு நாம் செலுத்தும் நன்றிக் கடப்பாடாகும். இனி இறவாப் புகழுடல் பெற்ற அவர்தம் வரலாற்றினைக் காண்போம்.

## வரலாறு

### பிறப்பு

பாண்டி நாட்டில், முகவை மாவட்டத்தில் சிறந்த வணிகத் தலமாகத் திகழ்வது விருதுநகர். இவ்வூரில் 1903ஆம் ஆண்டு *சூலைத் திங்கள் 15ஆம் நாள், திரு. குமாரசாமி நாடார்—சிவகாமி அம்மையார் ஆகியோரின் திருமகனாகத் தோன்றினார் காமராசர்.

### இளமைப் பருவம்

காமராசருக்கு 6ஆம் அகவை நடக்கும்போது திரு. குமாரசாமி நாடார் காலமானார். 'தந்தையோடு கல்விபோம்' என்னும் பழமொழி பொய்யாகுமா? எனவே, திரு காமராசரின் கல்வி 6ஆம் வகுப்போடு முற்றுப்புள்ளி இடப்பெற்றது.

சிறுவர் காமராசருக்கு உறுதுணையாக நின்றவர் அவர் அன்னையார் மட்டுமின்றிப் பாட்டியாரும் தாய்மாமனும் பக்கத் துணையாயினர். மாமன் கருப்பையா நாடாரின் துணிக்கடையில் பணியாற்றி வந்தார் காமராசர். அப்போதுதான் முதலாவது உலகப்போர் துவங்கிற்று. திரு. கருப்பையா நாடார் செய்தித் தாள்களைத் தவறாது வாங்கிப் படிப்பார். அதனால் ஓய்வு நேரங்களில் பத்திரிகை படிக்கும் பழக்கம் திரு காமராசருக்கு ஏற்பட்டது. இதனால் உலகச் செய்திகளை ஒருவாறு அறிந்து கொள்ளும் வாய்ப்பு இவருக்கு அவ்விளமைப் போதிலேயே கிட்டியது.

### விடுதலை வேட்கை

முதல் உலகப்போர் நிகழ்ந்து கொண்டிருந்த அதே நேரத்தில் இந்தியாவில் விடுதலைப் போராட்டமும் நடைபெறலாயிற்று.

---

*மறைத்திரு மறைமலையடிகளார் பிறந்தது 1876 சூலை 15 என்பது குறிப்பிடத்தக்கது.

நாடோறும் நாடெங்கும் விடுதலைக் கிளர்ச்சிகளும் அது பற்றிய செய்திகளும் நாடெங்கும் ஒரு பரபரப்பை ஊட்டின. திரு. காமராசரும் செய்தித் தாள்களை ஊன்றிப் படித்தார். அரசியல் தலைவர்களின் வீர உரைகள் இவர்தம் சிந்தை கவர்ந்தன. சீறி எழுந்தார். தாமும் விடுதலைப் போரில் ஈடுபட எண்ணினார். தமிழ்நாடு காங்கிரசுக் குழுவில் ஓர் உறுப்பினராகச் சேர்ந்தார். பொதுக் கூட்டங்களுக்குத் தவறாது சென்றார். தலைவர்களின் பேச்சுகளைக் கேட்டு மகிழ்ந்தார். தாமே முன்னின்று கூட்டங்களுக்கு ஏற்பாடுகள் செய்தார். வீடு வாயில்களை மறந்து, நாடு, விடுதலை என்னும் நினைப்பிலேயே நாள்களைக் கழிக்கலானார். வீட்டு வாழ்க்கை நாட்டு வாழ்க்கை ஆயிற்று. நாட்டு நலங்கருதி நாடோடி மனிதரானார். இது கண்டு இவர்தம் அன்னையாரும் மாமன்மார்களும் கவலையுற்றனர். காமராசருக்கு எப்படியேனும் ஒரு கால்கட்டுப் போட்டுவிட்டால் நாட்டை மறந்து வீட்டை நினைப்பார் எனக் கருதித் திருமண ஏற்பாடுகளை விரைந்து செய்யலாயினர்.

இச் செய்தி கேட்ட காமராசர், "திருமணம் என்று பேசினால், என்னை நீங்கள் வீட்டில் பார்க்க முடியாது; வீட்டை விட்டே போய் விடுவேன்" என்று சூளுரைத்தார். வேறு வழியின்றி உற்றாரும் உறவினரும் திருமணப் பேச்சைக் கைவிட்டனர்.

விருதுநகரிலிருந்து வெளியேற்றிவிட்டாலாவது விடுதலை வேட்கை குறையாதா என நினைத்து இவரைப் போடிநாயகனூருக்கும் பின்னர்த் திருவனந்தபுரத்திற்கும் அனுப்பி வைத்தனர் உறவினர். இவரும் சென்றார். ஆனால் அங்கெல்லாம் நிலைத்திராமல் மீண்டும் விருதுநகருக்கே திரும்பி வந்துவிட்டார்.

அறப்போரில் வேட்கை

திருவனந்தபுரத்தில் இருந்தபோது வைக்கம் அறப்போரில் ஈடுபட்டார். அப்போதிருந்து அறப்போரிலேயே வேட்கை மீதூரப்பெற்று விருதுநகர் வந்த பின்னரும், அறப்போர், பொதுக் கூட்டங்கள், ஊர்வலங்கள், தோளிலே மூவண்ணக் கொடி—உடலிலே கதர்—கையிலே உண்டியல்—வாயில் 'வந்தே மாதரம்' 'மகாத்மா காந்திக்கு ஜே' என்னும் முழக்கம்—இப்படியாகத் திரிந்தார்.

1920ஆம் ஆண்டில் ஒத்துழையாமை இயக்கம் தோன்றிற்று. அதில் கடுமையாக ஈடுபட்டார். 1923இல் மதுரையில்

கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டார். காவல்துறையினர் இவரைக் கைது செய்ய முயன்றனர். முடியவில்லை. அச் சூழலி னின்று தப்பி விட்டார்.

அடுத்து நாகபுரியில் 'கொடிப் போராட்டம்' என ஒரு போராட்டம் எழுந்தது. தொண்டர்கள் கொடியேந்தி ஒரு தெருவழியே செல்லக்கூடாது என்னும் சட்டம் பிறப்பிக்கப் பட்டது. தொண்டர்களை அனுப்பிக் கொடிப்போரில் ஈடுபடச் செய்தார் இவர். அப் போராட்டமும் ஒருவாறு நின்றது. அடுத்து வாள் போராட்டம் என ஒன்று கிளம்பிற்று. அதற்கு வாளேந்திய வீரர்களைத் தமிழகத்திலினின்று அனுப்பி வைத்தார்.

ஒத்துழையாமை இயக்கத்தின் விளைவாக இந்தியரின் விடுதலை வேட்கையினை உணர்ந்த ஆங்கிலேயர் ஆட்சிப் பொறுப்பினை ஓரளவு இந்தியர்வசம் ஒப்படைக்க முன்வந்தனர். அப்போதுதான் காங்கிரசுக் கட்சி சட்டசபைகளைக் கைப் பற்றுவது என முடிவு செய்தது. இராசாசி அவர்கள் தலைமையில் ஒரு குழுவினர் சட்டசபையைப் புறக்கணிப்பதென முடிவு செய் தனர். திரு சத்தியமூர்த்தி அவர்களைச் சார்ந்த சிலர் சட்ட சபைக்குப் போவதென முடிவு செய்தனர். காமராசர் காங்கிரஸ் கொள்கைப்படி நடப்பவர். எனவே திரு சத்தியமூர்த்தியின் பக்கமே நின்றார்.

அறப்போரில் ஈடுபடல்:

1927இல் 'சைமன் கமிஷன்' என்ற பெயரில் ஒரு குழு இங்கிலாந்திலிருந்து வந்தது. அதன் கொள்கைகள் பிடிக்காத தால் காங்கிரஸ்காரர்கள் அதனை எதிர்த்து நாடெங்கும் கிளர்ச்சி நடத்தினர். திரு காமராசர் அவ்வறப்போருக்குத் தலைமை தாங்கி நடத்தினார்.

1930இல் காந்தியடிகளின் ஆணைப்படி உப்புக் காய்ச்சும் உரிமைப் போர் நடந்தது. தமிழகத்தில் அப் போரில் ஈடு பட்டுக் காமராசர் 2ஆண்டு சிறை ஒறுப்பினை ஏற்றார். எனினும் காந்தி-இர்வின் ஒப்பந்தப்படி தலைவர்கள் 1931 இலேயே விடுதலை செய்யப் பட்டனர். காமராசரும் 1931இல் விடுதலை செய்யப் பெற்றார்.

1931இல் மதுரையில் தமிழ் மாநில மாநாடு நடை பெற்றது. அப்போது காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே இராசாசிக் குழு, சத்தியமூர்த்திக் குழு என இரு குழுக்கள் தோன்றின. திரு சத்தியமூர்த்தியவர்களே உண்மையான காங்கிரசுக்காரர் எனக் கண்டு அவருக்குத் துணை நின்றார் காமராசர்.

**தலைவர் தேர்தல்:**

நாளடைவில் இராசாசி சத்தியமூர்த்தி குழுக்களிடையே பூசல் வலுத்தது. தமிழகக் காங்கிரசு திரு. சத்தியமூர்த்தி அவர்கட்கே ஆதரவு தந்தது. இவ் வேளையில் திரு காமராசர் காங்கிரசு செயற்குழு உறுப்பினர் ஆனார். 1934 ஆம் ஆண்டில் இந்தியாவின் துணை மன்னராக (வைசிராய்) இருந்த வில்லிங்டன் மைய அரசின் சட்டமன்றத் தேர்தலை நடத்தினார். அதில் காங்கிரசுக் கட்சியினர் பெரும் வெற்றி பெற்றனர். அப்போது தேர்தல் பணிகளை மிகத் திறம்படக் கவனித்தார் காமராசர். 1936-இல் திரு. சத்தியமூர்த்தி தமிழகக் காங்கிரசின் தலைவராகவும் காமராசர் செயலாளராகவும் பதவி ஏற்றனர்.

1937இல் மாநிலச் சட்ட மன்றத் தேர்தல் நடந்தது. அக்காலை விருதுநகரில் காமராசரின் புகழ் கொடிகட்டிப் பறந்தது. எனவே அவர் எவ்விதப் போட்டியுமின்றி வெற்றி பெற்றார்.

1940இல் தமிழகக் காங்கிரசுக்கு மீண்டும் தேர்தல் நடைபெற்றது. இராசாசிக் குழுவுக்கும் சத்தியமூர்த்திக் குழுவுக்கும் பலமான போட்டி இருந்தது. சத்தியமூர்த்தி காமராசரைத் தலைவர் தேர்தலுக்கு நிறுத்தினார். காமராசர் அதில் வெற்றி பெற்றுத் தலைவரானார். அன்றிலிருந்தே அவர் புகழேணியில் விரைந்து ஏறலானார்.

1941இல் திரு காமராசர் பாதுகாப்புச் சட்டப்படி சிறை செல்ல நேரிட்டது. ஆனால் அதே ஆண்டில் அவர் விடுதலை செய்யப் பட்டார்.

1942இல் 'வெள்ளையனே வெளியேறு' என்னும் கிளர்ச்சி துவங்கிற்று. ஆங்கில அரசு நாட்டுத் தலைவர்களைத் தேடிப் பிடித்துச் சிறையிலடைத்தது. பம்பாய் மாநாட்டிற்குச் சென்று திரும்பிய காமராசர் இச் செய்தியறிந்து சில நாள் தலைமறைவாய் இருந்து தம்மைச் சார்ந்தோர்க்குப் போராட்டத் திட்டங்களை வகுத்துக் கொடுத்தார். பின்னர் ஒருநாள் அவர் விருதுநகரில் கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப் பெற்றார்.

1946இல் விருதுநகர்த் தொகுதியிலிருந்து இவர் சட்ட மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். 1948 இல் நடைபெற்ற காங்கிரசுக் குழுத் தேர்தலிலும் திரு. காமராசரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

**நேரு அவர்களுடன் தொடர்பு:**

காமராசர் பண்டித சவகர்லால் நேரு அவர்களிடம் பேரன்பு கொண்டிருந்தார். அவர்களிருவருக்கு மிடையே நெருங்கிய தொடர்பு உண்டாயிற்று. நேரு அவர்களை அனைத்திந்தியக் காங்கிரசுக் குழுத் தலைவராக்க அரும்பாடு பட்டார்

காமராசர். 1952 ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் காங்கிரசு பெரும்பான்மை பெறவில்லை என்ற காரணத்தால் கட்சித் தலைமைப் பதவியினின்று விலகினார் காமராசர். எனினும் தமிழகம் அவர் தலைமையினை இழக்க விரும்பவில்லை. அவ்வாண்டு இறுதியிலேயே அவர் மீண்டும் தலைவரானார்.

அயல் நாடுகளில் சுற்றுப்பயணம் :

திரு காமராசர் இலங்கைவாழ் இந்திய மக்களின் அழைப்பின் பேரில் முறையே 1949, 1953 ஆகிய ஆண்டுகளில் இலங்கை சென்று வந்தார்.

மலேயா மக்களின் அழைப்பிற் கிணங்க 1954இல் மலேயா, சிங்கப்பூர் நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தார்.

சோவியத் நாட்டு அரசாங்க அழைப்பிற் கிணங்க 1966 இல் சோவியத் நாடுகட்குச் சென்று வந்தார்.

முதலமைச்சர் காமராசர் :

1954 முதல் 1963 வரை திரு காமராசர் தமிழ்நாட்டின் முதலமைச்சராக இருந்து நல்லாட்சி நடத்தி வந்தார். அவர் காலத்தில் தமிழகத்தில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. அவற்றுள் பள்ளி இறுதிவரை மக்கட்குக் காசில்லாக் கல்வி அளிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

மூத்த தலைவர்கள் கட்சிப் பணியில் ஈடுபட வேண்டும் என்ற திட்டத்தின்படி 1963 அக்டோபரில் திரு. காமராசர் முதல்வர் பதவியினின்று விலகினார். எனினும் அனைத்திந்திய காங்கிரசுக் குழுவின் தலைவராகும் பேறுபெற்றார்.

இவர் காந்திய நெறியில் அளவிலாப் பற்றுடையவர். பொது நலத்தொண்டு செய்வதே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவர். காந்தியடிகளின் வழியைப் பின்பற்றி வாழ்க்கை நடத்திய திரு காமராசர் காந்தியடிகளின் பிறந்த நாளாகிய அக்டோபர் 2 ஆம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்தமை குறிப்பிடத் தக்க வியப்பூட்டுஞ் செய்தியாகும்.

## இறுதிப் பயணம்

அக்டோபர்த் திங்கள் 2ஆம் நாள் இம் மண்ணுலக வாழ்வை நீத்த பெருந்தலைவர் காமராசரின் பருவுடல் பொது மக்களின் பார்வைக்காக அன்று பிற்பகல் 5 மணி அளவில் இராசாசி மண்டபத்தில் கொண்டுவந்து வைக்கப்பட்டது. அவ்வளவில் பொதுமக்கள் அவரைக் காணத் திரள் திரளாக வந்தனர். தமிழகத்தின் திக்கெட்டுமிருந்து பேருந்துகளிலும் சுமையேற்றிகளிலும் ஏறிவந்து இராசாசி மண்டபத்தைச் சூழந்தனர். அண்ணாசாலை மக்கள் வெள்ளத்தால் மூடப்பட்டது.

மறுநாள் பொழுது விடிந்தது. அன்று பிற்பகல் 3 மணி யளவில் பெருந்தலைவரின் இறுதிப் பயணம் கிளம்பவிருக்கிறது. இராசாசி மண்டபத்தின் உள்ளும் புறமும், கண்ணீரும் கம்பலையுமாக நின்றது மக்கள் வெள்ளம். தலைவரின் பருவுடலை எப்படியேனும் பார்த்திடவேண்டும் என ஆவல் மீதூரப் பெற்ற கூட்டத்தினரை எந்தக் கட்டுக்குள்ளும் அடக்க முடியாத நிலையில் காவல் துறையினர் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

மணி 3 ஆயிற்று. தலைவரின் இறுதிப் பயணத்திற்கான ஏற்பாடுகள் விரைந்து நடந்தன. அரசியல் அதிகாரிகள் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி அவர்களின் வருகையை எதிர்நோக்கி நின்றனர். அம்மையார் 3-10 மணிக்கு வந்து சேர்ந்தனர். தலைவரின் உடலுக்கு மலர் வளையம் சார்த்தித் துயரத்தின் சின்னமாய்ச் சற்றுநேரம் நின்று வணங்கிய பின் அவ்விடம் விட்டு நகர்ந்தனர்.

தலைவரின் உடலைத் தாங்கிச் செல்வோர் அணிவகுத்து நின்றனர். மலர்களால் ஒப்பனை செய்யப்பட்ட பீரங்கி ஊர்தி தலைவரைச் சுமந்து செல்லக் காத்து நின்றது. தமிழக முதல்வர் கலைஞர் அவர்களும், மற்ற அமைச்சர்களும் அணிவகுத்து நின்றனர்.

அரசின் தலைமை அதிகாரிகள் எண்மர் தலைவரின் உடலைத் தாங்கிப் படிக்கட்டுகளின் வழியே கொணர்ந்து பீரங்கி வண்டியில் வைத்தனர். அவ்வளவில் சூழ்ந்து நின்ற மக்களின் துயரம் உயரலாயிற்று. பலர் குமுறினர். கோவெனக் கதறினர்—அழுதனர்-அரற்றினர்-விழுந்தனர்-புரண்டனர். நெருக்கியடித்துக் கொண்டு தலைவரைக் காண நெருங்கினர். இங்கும் காவல் துறையினர் மிக முயன்று கூட்டத்தை ஒழுங்குபடுத்தினர்.

பீரங்கி வண்டியில் மைய அரசின் நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம், திரு. கே. ராஜாராம் நாயுடு, திரு. பி. இராமசந்திரன், சிவாஜி கணேசன் ஆகியோரும் இருந்தனர்.

ஆடவரும் பெண்டிரும் அழுது புலம்பும் கண்ணீர்க் கடலில் தலைவரின் இறுதிப் பயணம் துவங்கிற்று. பீரங்கி வண்டி நகர்ந்தது. அதுகாறும் அடங்கியிருந்த மக்களின் துயரம் அடைக்குந்தாழின்றிப் பீறிட்டு வெளிப்பட்டது.

மக்கள் மட்டும் அழுதாரில்லை; மண்ணும் அழுதது; விண்ணும் அழுதது; வானம் இருண்டது. சிறு தூறல்கள் தோன்றின. பீரங்கி வண்டி நகர நகர, திரண்டு நின்ற மக்களின் திரண்ட துயரைப்போல் திரண்டு நின்ற வான்முகிலும் மழையெனப் பொழிய ஆரம்பித்தது.

அண்ணு சாலையின் மாடமாளிகை கூட கோபுரங்கள், மரங்கள் எல்லாவற்றின்மீதும் மக்கள் எள் விழ இடமின்றிச் செறிந்து நின்றனர். திரண்டு வந்த மழையால் அவர்களை விரட்ட முடியவில்லை. கண்ணீரிலும் தண்ணீரிலும் நனைந்த வண்ணம் அசையாது நின்றனர் மக்கள்.

வழி நெடுக மலர் தூவிச் சென்றது தனி ஊர்தியொன்று. அதன்மீது நகர்ந்து சென்றது பீரங்கி வண்டி. ஆங்காங்கே விண்ணோர் மலர் பொழிவது போல் உயர்ந்த இடங்களினின்று மலர் தூவப்பெற்றது.

செய்தித் துறையினரின் படமெடுக்கும் ஊர்தி, முன்னே படமெடுத்த வண்ணம் சென்றுகொண்டிருந்தது. வானொலி நிலையத்தார் தனியூர்தியிலமர்ந்து ஊர்வலச் செய்திகளை வழி நெடுகிலும் பரப்பி வந்தனர். படமெடுக்கும் பணி ஒருபுற மிருக்கச் செய்தி இதழ் எழுத்தர்கள் தனியூர்தி யொன்றிலிருந்து செய்திகளைத் தொகுத்தவண்ண மிருந்தனர். நிழற்பட மெடுப் போர், நின்றும்–இருந்தும் நடந்தும்-ஓடியும் மாடிகளின் உச்சி யினின்றும் நிழற்பட மெடுத்தவண்ணமிருந்தனர்.

இந்நிலையில் நடந்த தலைவரின் இறுதிப் பயணம் மறைமலையடிகள் பாலத்தைக் கடந்து சற்று விரைந்து சென்று கிண்டி காந்தி மண்டபத்தை அடுத்து ஏற்பாடு செய்யப்பட் டிருந்த எரியூட்டுமிடத்தை 6-20 மணியளவில் அடைந்தது.

நன்காட்டில் சமயப் பாடல்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. பாதுகாப்புத் துறையினைச் சேர்ந்த அதிகாரிகள் அறுவர் பீரங்கி வண்டியினின்றும் உடலை இறக்கி எரியூட்டும் மேடைக்கு எடுத்துச் சென்றனர். அம்மேடைக்குச் சற்றுத் தொலைவில் அமைச்சர்களும் தலைவர்களும் மற்றொரு மேடையில் அமர்ந் திருந்தனர்.

சமயச் சடங்குகள் நடைபெற்றன. இந்தியத் தலைமை அமைச்சர் இந்திரா காந்தி அவர்கள் தாமே பெரிய மலர் வளையம் ஒன்றை எடுத்துக் காமராசர் உடலுக்கு வைத்துத் தமது இறுதி வணக்கத்தைக் கண்ணீர் மல்கச் செலுத்தினர். அவரைத் தொடர்ந்து மைய, மாநில அமைச்சர்களும், அரசியல் தலைவர்களும் மலர் வளையம் வைத்தனர்.

படைவீரர் மும்முறை வான்நோக்கிச் சுட்டனர். படையின் துயர இசை இசைக்கப்பட்டது. 'காமராசர் வாழ்க!' 'ஏழையரின் நண்பர் நீடு வாழ்க!' என்று முழங்கினர் கூட்டத்தினர். காமராசரின் தங்கையின் பேரன் காமராசர் உடலுக்கு எரியூட்டினர். மீண்டும் படைவீரர் வான் நோக்கிச் சுட்டனர். துயரத்தினிடையே அமைதியும் விம்மலும் நிறைந்

தன. காடுவரை உறவாக வந்த அனைவரும் ஒருவர் பின் ஒருவ ராக அவ்விடம் விட்டகன்றனர். தீயின் நாவுகள் காமராசரின் உடலைத் தழுவிப் புகழொளி காட்டி நின்றன !

### எலும்பு கரைத்தல்

காந்தியடிகள் மறைந்த பின் அவர் எலும்புகள் (அஸ்தி) கங்கை, காவிரி, கோதாவரி போன்ற இந்திய நாட்டின் பேராறுகள் அனைத்திலும், கடல்களிலும் கரைக்கப்பட்டது போல் தலைவர் காமராசர் அவர்களின் எலும்புகளும் நாட்டின் பல்வேறு பேராறுகளிலும் புனித நீர்நிலைகளிலும் கரைக்கப் பெற்றது என்ற செய்தி குறிப்பிடத்தக்கதாகும். காந்தியடி கட்குப்பின் காமராசர் ஒருவருக்கே இத்தகைய சிறப்பு கிட்டிற்று என்பதும் கவனிக்கத்தக்கது.

### காமராசர் பற்றிய கருத்துரைகள்

திரு. காமராசர் அவர்களின் மறைவு குறித்து இரங்க லுரைகள் வழங்கிய அரசியல் தலைவர்களும் பிற பெருமக்களும் அவரால் ஏற்பட்ட இழப்பு மிகப் பெரிது எனவும், ஈடு செய்ய இயலாதது எனவும் கூறியுள்ளனர். ஆனால் அவருள்ளும் சிலர் சில சீரிய கருத்துகளை வெளியிட்டுள்ளனர். ஒரு சில பெரு மக்களின் கருத்துரைச் சுருக்கங்கள் வருமாறு :

> ''எல்லா மக்களின் நன்மதிப்பையும், புகழையும் செல் வாக்கையும் பெற்றிருந்தார் காமராசர். எளிய தொண்ட ராக விடுதலைப் போரில் ஈடுபட்டு அரசியல் வாழ்வைத் தொடங்கி, காங்கிரசில் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றவர் அவர். கட்சியைத் திறம்பட நடத்தும் ஆற்றலும், நாடாளுந்திறனும் படைத்தவர். அவர் ஏழை எளியவர் களின் நலனுக்காகவே பாடுபட்டார். சனநாயகத்தை வலுப்படுத்துவதிலும், அரசியலில் சிக்கல்கள் எழும்போது அவற்றைத் தீர்ப்பதிலும் வல்லவர். இந்திய காங்கிரசில் தலைவராக இருந்து நேரு, சாத்திரியார் ஆகியோர் மறைவுக்குப்பின் அவர் ஆற்றிய தொண்டு பாராட்டத் தக்கவை''

என்று இந்திய தலைமை அமைச்சர் இந்திராகாந்தி அவர்கள் கூறி யுள்ளார்கள்.

> ''அரசியலில் எத்துணைச் சிக்கல்கள் ஏற்பட்ட போதி லும் அவற்றைச் சீர் செய்யும்பொது அறிவு மிக உடையவர் காமராசர்''

என்று தமிழக ஆளுநர் மாண்பமை கே. கே. ஷா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

''தியாகச் சுடர் அணைந்துவிட்டது. தமிழ் மக்களின் உள்ளங்களில் குடி கொண்டிருந்த ஒரு தலைவரை நாம் இழந்து விட்டோம். நாட்டின் முன்னேற்றத்திற்கும் சன நாயகத்திற்கும் அரும்பாடு பட்டவர் அவர்''

என்று கூறியுள்ளார் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்.

''நாடு இக்கட்டான நிலைகளிலிருந்த போதெல்லாம் தம்முடைய நுண்ணறிவால் நாட்டையும் மக்களையும் காப் பாற்றி நாட்டின் எதிர்காலத்தைத் திருத்தி அமைத்தவர் திரு. காமராசர்''

என்று மைய அரசின் நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

''கட்டுப் பாட்டினைக் காத்துக் காமராசர் வழியில் நடப் போம்'' என முன்னாள் அனைத்திந்திய காங்கிரஸ் கட்சித் தலைவர் நிஜலிங்கப்பா கூறினார்.

''நல்லது செய்தோரைப் பாராட்டத் தவறாத பண்பினர் காமராசர்'' என திரு ராசாராம் நாயுடு கூறினார்.

''படித்தவர்கள்தாம் பதவிக்கு வரமுடியும்'' என்ற நிலையை மாற்றிக் காட்டினார் காமராசர்'' என்று கூறியுள்ளார் முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம் அவர்கள்.

''உழைப்பால் உயர்ந்து, பொதுத் தொண்டிற்காகத் தம்மையே ஒப்படைத்துக்கொண்ட தலைவர்''

என்றார் தமிழகக் கல்வி அமைச்சர் நாவலர் நெடுஞ் செழியன் அவர்கள்.

''பாரதத் திருநாட்டின் காந்தீயத் தூண்களில் ஒன்று மறைந்துவிட்டது. ஏழை, எளிய குடியில் பிறந்து காந்தி, நேரு, ராஜாஜி ஆகியோர் போற்றுகின்ற வகையில் பெருந் தலைவராக வாழ்ந்த வரலாற்றைத் தமிழினத்திற்குத் தந்து விட்டு நம் வரலாற்று நாயகன் மறைந்து விட்டார்.''

என்று கூறினார் சிலம்புச் செல்வர் ம. பொ. சி.

மற்றும் மையஅரசின் அமைச்சர்கள், மாநிலங்களின் முதல் வர்கள், அரசியல்கட்சிகளின் தலைவர் ஆகியோர் தெரிவித்திருக் கும் கருத்துகளில் காமராசரின் நாட்டுப்பற்று, அரசியல் திறம் ஆகியனவே பெரிதும் குறிப்பிடப்பட்டுள்ளன.

## நினைவுச் சின்னங்கள்

மறைந்த மாபெருந் தலைவரின் நினைவு மக்கள் உள்ளத்தில் என்றும் நிலைத்திருக்கவேண்டும் என்பதற்காகத் தமிழக அரசு



மறைந்த தலைவர் காமராசர் அவர்கட்கு
இந்தியாவின் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி
அவர்களும் தமிழக முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி
அவர்களும் இறுதிவணக்கம் செலுத்துதல்

மக்கள் வெள்ளத்திடையே



பெருந்தலைவர் காமராசரின்
இறுதிப்பயணம்

திரு. காமராசருக்கு நினைவுச் சின்னங்கள் அமைக்கத் திட்டமிட்டுள்ளது. காந்தியடிகள் பிறந்த நாளில் மறைந்த காமராசருக்குக் கிண்டி காந்தி மண்டபத்தை யடுத்து 'நினைவு மண்டபம்' எழுப்பப்படும் என்றும், சென்னைத் திருவல்லிக்கேணி கடற்கரைச்சாலை இனிக் 'காமராசர் சாலை' எனப் மாற்றப்படும் என்றும், விருதுநகரில் காமராசர் பிறந்த இல்லத்தையும் அரசு வாங்கித் தேசிய சின்னமாக அமைக்கும் என்றும் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தமிழின உணர்வோடும் கடமையுணர்வோடும் அறிவித்துள்ளார்.

அத்துடன் சென்னைத் தேனாம்பேட்டை மைதானம் என்றிருந்ததைக் 'காமராசர் திடல்' எனப் பெயர் மாற்றம் செய்ய வேண்டும் என்றும் நடிகர் திலகம் சிவாசி கணேசனின் கருத்துரையும் ஏற்கப்பட்டுள்ளது என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

## இரங்கற் பாக்கள்

விருந்தனைய விடுதலையின் வீரவித்தை,
விழுமியோர்கள் விரும்பும் முத்தை,
இருந்துயரப் பிணிபோக்கும் ஏர்மருந்தை,
'ஆகட்டும் பார்க்கலாம்' என்ற
அருந்தமிழை, ஆர்ந்தபேச்சே அரும்பாத
அருஞ்செயலை, தியாகச் சுடரை,
பெருந்தலைவ! காமராச!! என்றுகாண்போம்?
பெரும்பிறிதால், பேதுற் றேமே!

—கோ. வே. பெருமாள்.

தமிழ்நாட்டிற் காங்கிரஸ் தலைவரென வுற்றார்
தமிழ்மக்கள் கல்விநலம் சார—அமிழ்தேபோல்
சம்பளமில் லாதுகற்கத் தக்கமுறை செய்தார்
இம்பரில்யார் ஒப்பார் இவர்க்கு.

—தி. செ. முருகதாச அடிகள்.

எல்லோரும் காந்திநெறி யிற்சென்று வாழ்கஎனச்
சொல்லோவி யந்தந்தாய் சுடரனைய வாடுதல்போல்
பல்லோரும் பரதவிக்கப் பயில்விண் ணகம்சென்றாய்
நல்லோர்கண் ணீர்வடிக்க நாட்டினைவிட் டேகினையே.

—புலவர் தி. மு சங்கரலிங்கம்.

———

## திரு. டாக்டர் மு. வரதராசனர் அவர்களின் முதல் ஆண்டு நினைவு நாள் 30-9-1975 இல்

[அவர் மக்கள் திரு. வ. தி. அரசு, திரு. வ. நம்பி, திரு. வ. பாரி மூவரும் ஓதிய போற்றிப் பாடல்]

எங்கட்கு இனிய எந்தாய்! போற்றி!
அன்பின் உருவாம் அப்பா! போற்றி!
தகைமை சான்ற தந்தாய்! போற்றி!
அரும்பெறல் திருவாம் அத்தா! போற்றி!

தெய்வ மேனித் திருவே! போற்றி!
எம்மைப் பெற்ற இறைவா! போற்றி!
எம்அன்னை போற்றும் ஏந்தல்! போற்றி!

அவை முந்திருக்கச் செய்தாய்! போற்றி!
அனைத்து நலம்பெற வைத்தாய்! போற்றி!
பேரர்க்கு உகந்த பெரும! போற்றி!

பண்பிற் சிறந்த பண்பா! போற்றி!
தண்ணளி மிக்க அண்ணல்! போற்றி!
எவரும் ஏத்தும் எழிலே! போற்றி!
மாணவர் வணங்கும் மாண்பே! போற்றி!

குறை யொன்றில்லா நிறைவே! போற்றி!
உள்ளொளி உணர்வால் உயர்ந்தாய்! போற்றி!
கடுஞ்சொல் அறியாக் கனியே! போற்றி!
எவர்க்கும் இனிய தவத்தாய்! போற்றி!

மன்பதைக் குதவும் மனத்தாய்! போற்றி!
நினைப்பிலும் எளிமை நிறைந்தாய்! போற்றி!
வாழ்க்கையில் தூய்மை வளர்த்தாய்! போற்றி!
திரு. வி. க. வழித் திகழ்ந்தாய்! போற்றி!

எழுதும் சிறப்பில் ஈடிலாய்! போற்றி!
குறள்தெளி வுரையாய்! குரிசிலே! போற்றி!
அறிவுரை நூலில் அளித்தாய்! போற்றி!
மக்கள் குறைகளை மாற்றினுய்! போற்றி!

குடும்பச் சிக்கல்கள் அறுத்தாய்! போற்றி!
தெய்வமாய்த் தங்களைத் தொழுவார்! போற்றி!

எளியவர் பலர்க்கு உதவினுய்! போற்றி!
மறைவாய் வழங்கி மகிழ்ந்தாய்! போற்றி!
'செய்தேன் உதவி' என்னுய்! போற்றி!
நன்றி சொலவரின் நயவாய்! போற்றி!

தமிழ்மொழிப் புலமையின் தலைவா! போற்றி!
தமிழ்த்துறைத் தலைமை பூண்டாய்! போற்றி!
தமிழ்செய் தவத்தின் தனியா! போற்றி!
உலகம் முழுதும் உலவினுய்! போற்றி!

பலர்பட் டம்பெற விழைந்தாய்! போற்றி!
அஞ்சலில் கற்க அமைத்தாய்! போற்றி!

துணைவேந் தர்பணி சிறந்தாய்! போற்றி!
உயர்நிலை பிறபெற இருந்தாய்! போற்றி!

காலன் அந்தோ! கடுகினன் போற்றி!
திருவடி நாடி விரைந்தாய்! போற்றி!
ஏங்கி அனைவரும் இரங்கினம் போற்றி!

இங்கெழுந் தருள இசைவாய் போற்றி!
எங்கள் பூசனை ஏற்றருள் போற்றி!
இறையடி சேர்வதை இறைஞ்சுவம் போற்றி!
அருள்நிலை பெறுவதற் காற்றுவம் பூசை.

சேவடி சென்னியிற் சூடுவம் போற்றி!
டாக்டர் மு. வ, எனஉல கழைக்கும்
வரத ராசர்எம் வரந்தரும் ஐயா!
போற்றி! போற்றி! போற்றி! போற்றி!
தண்ணருள் எங்கணும் தழைத்திடப் போற்றி!
போற்றி! போற்றி! போற்றி! போற்றி!
புகழ்நிலைத் தோங்கிப் போற்றி! போற்றி!

—கீ. இராமலிங்கன்

---

## ஓசூரிலுள்ள ஒகேனகல்லில் கண்கவர் மிக்க பலவண்ணக் கற்கள்

இக் கற்களில் ஒன்றை மட்டும் காணும் வாய்ப்பினைப் பெற்றேன். அது வெளிறிய ரோசா நிறத்தில் காணப்பெற்றது. சிறுசிறு துண்டுக் கற்களும், சிறுசிறு அளவில் வெண்ணிற பிளாஸ்டிக் தகடு போன்ற கற்பட்டைகளும் ஒன்று சேர்க்கப் பெற்றதுபோல மினுமினுவென அத்துண்டுக்கல் உள்ளது. அரிசிப் பொரிமா, பொரிகடலை, வறுத்த தேங்காய்ப் பல், எள் ஆகியவற்றை வெல்லப்பாகில் சேர்த்துப் பிடிக்கப் பெற்ற கட்டிபோல் உள்ளது என்றும் சொல்லலாம். இந்த நிறத்தைப் போல இன்னுஞ் சில வண்ணங்களிலும் கற்கள் உள்ளனவாம். அவை வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பெறுகின்றன எனவுங் கேள்வி யுற்றேன். ஏன் அவற்றைக் கொண்டு தமிழ் நாட்டுத் தொழில் துறையினர் தளத்துக்குரிய மொசேக் பாவுகல், சிப்சு ஆகியவற்றைச் செய்யவோ அல்லது வேறு பயன்படு பொருள்களைச் செய்யவோ கூடாது என்ற கருத்து எனக்குத் தோன்றுகிறது.

இதனைத் தமிழ்நாடு தொழில்துறை அமைச்சர் மாண்புமிகு சாதிக்பாஷா அவர்கள் பார்த்தவுடன் தமிழ் நாட்டில் இக் கல்லைப் பயன்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை உடனே செய்துள்ளார்கள் என்பதறிந்து மகிழ்கிறேன். —வ. சு.

## தாய்மொழியில் கல்வி பயில்வதே சிறந்தது

"தாய் மொழியில்தான் கல்வி பயிலவேண்டும். மாநில மொழிகள் நமது நாட்டின் சிறந்த செல்வங்கள். மாணவர்கள் தம் தாய்மொழியில் கல்வி பயில்வதுதான் சாலச் சிறந்தது" என்று இந்திய குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது 14-9-75இல் நாகபுரியில் ஒரு நிகழ்ச்சி யில் பேசியபோது குறிப்பிட்டார்.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## அறிஞர் அண்ணு பற்றிக் கிருபானந்தவாரியார் கருத்துரை

"எந்த உயிர்களுக்கும் மனம் நோக நடக்காமை, குற்றம் செய்தவரை மன்னித்தல், அறிவினை அறிவால் அறிவது ஆகிய மூன்று அருங்குணங்களும் அண்ணு அவர்களிடத்தில் மேலோங்கி இருந்தன. அண்ணு அவர்கள் தமிழ்ச் சமுதாயத்தின்மீது கொண்டிருந்த அன்பு அருளாக மாறியது. விருப்பு-வெறுப்பு, வேண்டியவர்-வேண்டாதவர் என்ற நிலை அவருக்கில்லை. எனவே அவர் தெய்வமானர். குமும்பாயத்தின் அடித்தளத்தில் இருப்போர், ஏழை எளியோர் ஆகியோரின் கண்ணீரையும் துயரத்தையும் துடைக்கும் பணியில் தம்மை ஒப்படைத்துக்கொண்ட அண்ணு அவர்கள் ஏன் தெய்வமாக முடியாது'' என்று திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் 16-9-75இல் திருமயிலை கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில் நடைபெற்ற பேரறிஞர் அண்ணு அவர்களின் 67ஆவது பிறந்த நாள் விழாவில் பேசியபோது குறிப்பிட்டார்.

நல்லோர்கள் இறந்தபின் தெய்வத் தன்மை அடைகின்றனர் என்பதற்குத் திரு. வாரியார் அவர்களின் கருத்து ஒரு சான்ருகும். 'தெய்வம்' என்பது ஒரு தனி ஆற்றல். 'தேயு' என்னும் வேர்ச்சொல்லினின்று பிறந்த சொல்லே தெய்வம் என்பது. தேயு என்ருல் தீ என்று பொருள். தீ பருப்பொருள்களை நுண்பொருள்களாக்கித் தூய்மை படுத்த வல்லது. அதுபோல் மனிதருட் சிலர் இறப்பு என்னும் தீயால் தூய்மை செய்யப்பெற்றுத் தெய்வத்தன்மை அடையலாம். இவையெல்லாம் மறைத்திரு மறைமலையடிகளாரின் 'மரணத்தின் பின் மனிதர் நிலை' என்னும் நூல்வழி நன்கறியலாம். நாம் அடிக்கடி செல்வியில் குறிப்பிட்டுவரும் ஆவியுலகச் செய்திகளும் இந்த உண்மையினை உணர்த்துவனவேயாகும்.

## தமிழில் பெயர்ப் பலகைகள்

தமிழகத்திலுள்ள கடைகளின் பெயர்ப் பலகைகள் அனைத்தும் தமிழில் எழுதப்பட வேண்டும். இன்றியமையாத தேவை ஏற்பட்டால் பிறமொழிகள் இரண்டாவதாக இடம் பெறலாம் என்ற வகையில் தமிழக அரசு உள்ளாட்சித்துறை, தமிழ்நாடு பஞ்சாயத்துச் சட்டம், மற்றும் நகராட்சி, மாநகராட்சிச் சட்டங்களையொட்டி விதிமுறைகளைத் தக்கவாறு திருத்தியமைக்கத் தமிழக முதல்வர் 16-9-75இல் ஆணை பிறப்பித்துள்ளார்.

பெயர்ப்பலகைகளைத் தமிழில் அமைக்க வேண்டும் என்னும் இம்முயற்சி நம் கழகத்தால் 1938ஆம் ஆண்டிலேயே துவக்கப்பெற்று அதன் தொடர்பாக எங்கும் எதிலும் தமிழ் இடம்பெற வடசொல் தமிழ் அகர வரிசைச் சுருக்கம், இல்லப் பெயர் அகரவரிசை, மக்கட் பெயர் அகரவரிசை, தமிழில் அழைப்பிதழ் எழுதுமுறை இன்ன பிற தமிழ்ப் பாதுகாப்பு வெளியீடுகள் வெளியிடப் பெற்றதும், அதற்கெனத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகமென ஒரு கழகம் தோற்றுவிக்கப் பெற்று, அஃது இன்றுகாறும் பல ஆக்கப்பணிகள் செய்து வருவதும் தமிழகம் அறிந்த செய்தியாகும். அத்தகைய பணிகள் இன்று அரசினரால் சட்டத்தின் துணைகொண்டு செய்யப்படுவது கண்டு மகிழ்ச்சியடைகிறோம். அரசின் முயற்சியினைப் பாராட்டுகிறோம்.

## சென்னையில் கலைஞர் சிலை திறப்பு விழா

தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் உருவச்சிலையொன்று சென்னை அண்ணாசாலையும் ஜெனரல் பீட்டர்ஸ் சாலையும் சந்திக்குமிடத்தில் 21-9-75இல் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் திறந்துவைக்கப் பெற்றது. திராவிடர் கழகத் தலைவர் திருவாட்டி ஈ. வே. ரா. மணியம்மையார் இச் சிலைத்திறப்பு விழாவிற்குத் தலைமை தாங்கினார், தி. க. பொதுச் செயலாளர் திரு. கே. வீரமணி எம். ஏ., பி. எல். வரவேற்புரை நிகழ்த்தினார். செட்டி நாட்டரசர் திரு. எம். ஏ. முத்தையா செட்டியார், மணலி கந்தசாமி ஆகியோர் கலைஞரின் தொண்டுகளைப் பாராட்டிப் பேசினர்.

## தமிழில் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவு

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றில் இடம் பெறத்தக்க நிகழ்ச்சியாகக் கடந்த 20-9-75இல் நடைபெற்ற பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவினைத் தமிழக முதல்வர் டாகடர் கலைஞர் மு. கருணாநிதியவர்கள் தமிழில் ஆற்றினார், பல்கலைக்கழக வரலாற்றில் இதுகாறும் 117 பட்டமளிப்பு விழாக்கள் நடைபெற்றுள்ளன. ஆனால் இப்போது நடைபெற்ற 118ஆவது விழாவில்தான் தமிழில் பட்டமளிப்புப் பேருரை வழங்கப்பட்டது அப் பேருரையில் தமிழ் மொழியின் சிறப்பினை எடுத்துக்கூறித் "தாய்மொழிச் சிந்தனைக்கு முதலிடந் தந்து கல்விக் கூடங்கள் தரமான குடிமக்களை உருவாக்கப் பயன்பட வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார் கலைஞர். கலைஞர் அவர்களின் மொழிப் பற்றினைப் பாராட்டுகிறோம். வளர்க தமிழ்!

## எல்லாத் துறைகளிலும் இந்தி—நடுவண் அரசின் புதிய திட்டம்

இந்தி மொழி வளர்ச்சி ஆலோசனைக்குழு என ஒரு குழு அமைக்கப் பெற்றுள்ளது. இக் குழுவின் கூட்டம் 27-9-75இல் நடைபெற்றது. அக் கூட்டத்திற்கு உள்துறை இணை அமைச்சர் ஓம் மேத்தா தலைமை தாங்கினார். நாட்டுடைமை ஆக்கப்பெற்ற எல்லா வங்கிகளிலும் 'பாஸ்' புத்தகங்களும், விண்ணப்பப் படிவங்களும் இந்தியிலும் ஆங்கிலத்திலும் கிடைக்கும்படி செய்வதெனவும், அலுவலகங்களின் பெயர்ப் பலகைகளை இந்தியிலும் ஆங்கிலத்திலும் எழுதிப் பொருத்துவது எனவும், விளம்பரங்களையும், அரசு ஆணைகளையும் இந்தியிலேயே பிறப்பிப்பது எனவும் இக் கூட்டத்தில் முடிவு செய்யப் பெற்றது. அத்துடன் எல்லா அமைச்சகங்களிலும் அரசுத் துறைகளிலும் 'இந்தி மொழி ஆலோசனைக் குழுக்கள்' விரைவில் அமைக்கப்படும் என்றும் அமைச்சர் ஓம் மேத்தா நம்பிக்கை தெரிவித்தாராம்!

## இணைப்பு மொழியாதற்குரிய தகுதி இந்திக்கே! ஆங்கிலத்துக்கில்லை!

"ஆங்கிலத்தைப் புறக்கணித்துவிடக் கூடாது. இந்தியாவில் ஒருவரோடொருவர் தொடர்பு கொள்ள ஒரு பொது மொழி வேண்டும். நம் தேசிய உணர்வுகள் எப்படியிருந்தபோதிலும், அதற்குரிய தகுதி இந்திக்கே உண்டு. இதற்குக் காரணம் அது சிறந்த மொழி என்பதன்று. நாம் இணைப்பு மொழியின் இன்றியமையாமையினை உணர வேண்டும். வகுப்பறைகளில் மட்டுமே நாம்.

மொழிகளைப் பயில்வதில்லை. பிறருடன் உரையாடும்போதும், பழகும் போதும், வாதிடும் போதும் உணவு கொள்ளுமிடங்களிலும் மொழியினைப் பயில முடியும். நான்கூட உணவருந்தும் அறையில் தான் சில அயல் மொழிகளைப் பயின்றேன்.''

இவ்வாறு தலைமை அமைச்சர் இந்திரா காந்தி அம்மையார், தில்லியில், அனைத்திந்திய கல்லூரித் தலைவர்களின் மாநாட்டைத் தொடங்கிவைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

## பாதுகாப்புத் துறைக்கும் இந்தி

இந்திய நாட்டுப் பாதுகாப்புத் துறையில் இந்தி மொழியை அதிகமாகப் பயன்படுத்த வேண்டும் என்று மைய அரசினர் திட்டமிட்டுள்ளனர். இதற்காக ஆங்கிலத்திலும் இந்தியிலும் பாதுகாப்புப் பணித்துறை பற்றிய அறிவிப்புகள் அடங்கிய புத்தகமொன்று பாதுகாப்புத்துறை அமைச்சர் திரு. சுவர்ண்சிங் அவர்களால் 28-9-75 இல் புது தில்லியில் வெளியிடப் பெற்றது. தரைப்படை, கப்பற்படை, வான்படை ஆகிய முப்படைத் துறையிலும் ஆங்கிலத்திலும் இந்தியிலும் ஆணைகளை வெளியிடுவது பற்றியும் ஆராயப் படுகிறதாம். பாதுகாப்புத் துறைபற்றிய அறிக்கைகள் கையேடுகள் முன்னரே இந்தியில் வெளியிடப் பெற்றுள்ளன. அத்துடன் பொதுவான கலைச் சொல் விளக்கம் (Glossary) ஒன்றும் தயாராகி வருகிறதாம்.

## தொடர் வண்டித் துறையிலும் இந்தி!

"இந்தி பேசாத பகுதிவாழ் மக்களுடன் இந்தி பேசுவோர் பரிவுடன் நடந்துகொள்ள வேண்டும், இந்தி மொழியாளர்கள் மொழி வெறியர்கள், முறைகேடாக நடப்பவர்கள் என்ற தவறான எண்ணத்தை இந்தி பேசாத மக்களிடத்தினின்று நீக்க வேண்டும். இந்தி மொழியை வளர்க்க, அதனைச் செயல் முறைக்குக் கொண்டுவர எல்லா முயற்சிகளையும் துணிவோடும் பொறுமையோடும் செய்தல் வேண்டும். தொடர் வண்டித் துறையில் இந்தியைப் பயன்படுத்த இரண்டு குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை இந்திப் பேரகராதி தயாரிக்கவும், இந்திப் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கவும் முயலும். அத்துடன், தலைமை நிலையங்கள் வட்டாரங்கள் ஆகியவற்றில் இந்தி நூல்நிலையங்களை நிறுவவும் எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன. இந்தியுடன் ஆங்கிலமும் பயன்படுத்தப்படும்'' என்று மைய அரசின் தொடர் வண்டித்துறை அமைச்சர் கமலபதி திரிபாதி அவர்கள் 29-9-75இல் ஐதராபாத்தில் நடைபெற்ற ஐந்தாவது இந்தி மாநாட்டில் தலைமை தாங்கிப் பேசியபோது குறிப்பிட்டார்.

## இந்தி பெறும் வரவேற்பு

இந்தி ஆதரவாளர்களின் விருப்பத்திற்கிணங்கி 1973ஆம் ஆண்டில் பம்பாய் தொலைபேசி நிறுவனத்தினர் இந்தியில் தொலைபேசி வழிகாட்டி (Telephone Directory)யினை 12000 படிகள் அச்சிட்டு விற்பனைக்கு அனுப்பினர். மூன்று படிகளை ஒரு விற்பனை நிலையம் வாங்கிற்று. மேலும் 50 படிகள் விற்பனையாயின. எஞ்சிய படிகள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடந்தன. இந்நிலையில் ஒருநாள் இந்த இந்திப் பதிப்பின் 6000 படிகள் தேவை என்று உள்ளூர் வணிகர் ஒருவரிடமிருந்து கடிதம் வந்ததும், பதிப்பாளர்கள் மகிழ்ச்சி அடைந்தனர். எனினும்,

ஒருவரே 6000 படிகளை வாங்கக் காரணமென்ன என்று ஐயப்பட்டு இது பற்றி விசாரித்தனர்.

இரண்டரைக் கிலோ எடையுள்ள அந்த இந்திப் பதிப்பு விலை 4 ரூபாய். ஆனால், அதனையே பழைய ஏடுகளாக விற்பனை செய்தால் அதன்மதிப்பு 6 ரூபாயிலிருந்து 8 ரூபாய் அளவிற்கு உயர்ந்தது என்ற உண்மை தெரிய வந்தது.

இச் செய்தியறிந்த தொலைபேசி நிறுவனத்தார் அந்தப் பதிப்பின் விலையையே உடனே 12 ரூபாயாக உயர்த்தி விட்டனர். எனினும் அது விற்பனையாகவில்லை. எனவே சில நாள்கள் கழித்து தேங்கிக் கிடந்த அந்தப் படிகளை அவர்களே பழைய ஏடுகளாக விற்பனைக்குத் தள்ளிவிட்டனர்! கருத்து: கல்கி 28—9—75

## கண்டேகார் நூலுக்கு நூறாயிரம் வெண்பொற் காசுகள் பரிசு!

புகழ்பெற்ற மராத்திய நூலாசிரியர் திரு விஷ்ணு சக்கரம் கண்டேகார் அவர்கட்கு ஞானப்பீத் இலக்கியக் குழுவின் பரிசாக நூறாயிரம் வெண்பொற் காசுகள் வழங்கப்பெற்றுள்ளது. இவர் 1898ஆம் ஆண்டில் மராத்திய மாநிலத்தில் ஒரு சிற்றூரில் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தவர்; பள்ளி ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கியவர்; எழுத்தாற்றல் மிக்கவர்; குழும்பாய வாழ்க்கையைச் சித்திரிக்கும் புதினங்கள் பல எழுதிப் படிப்படியாகப் புகழ் பெற்றார்; 15 புதினங்கள், 29 சிறு கதைகள் 11 கட்டுரைகள், 10 இலக்கியத்திறனாய்வுகள் ஆகியன இவரால் எழுதப் பட்டுள்ளன.

## நூலாசிரியர் திரு அகிலனுக்குப் பத்தாயிரம் வெண்பொற் காசுகள் பரிசு!

புகழ் பெற்ற நூலாசிரியர் திரு. அகிலன் அவர்கட்கு அண்மையில் 10 ஆயிரம் வெண்பொற் காசுகள் இலக்கியப் பரிசாக வழங்கப்பட்டன. சிறந்த இலக்கியத்திற்காக ராஜா அண்ணாமலை செட்டியார் பெயரில் அமைக்கப்பட்டுள்ள பரிசுத் திட்டப்படி முதன் முதலாக இது வழங்கப் பட்டுள்ளது. "எங்கே போகிறோம்" என்ற தலைப்பில் திரு. அகிலன் எழுதிய நாவலுக்காக இப் பரிசு, 31-9-75 இல் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்ற விழாவில் வழங்கப்பட்டது. முன்னாள் உயர்நீதிமன்ற நடுவர் உயர்திரு மகாராஜன் அவர்கள் தலைமை தாங்கி இப்பரிசினை வழங்கினார்.

## மகிழ்நன் தமிழ்க் கழக 2-ஆம் ஆண்டு விழா

வேலூர் ஊரிசு உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியராகப் பணியாற்றிய வரும், சிறந்த தமிழறிஞரும், சிறந்த எழுத்தாளரும், நகைச்சுவைக் கட்டுரைகள் எழுதுவதில் வல்லவரும், மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள், அரசாளப் பிறந்த மகன் ஆகிய கழக நூல் களின் ஆசிரியருமான, காலஞ்சென்ற மகிழ்நன் என்னும் க. ப. சந்தோசம் அவர்களின் நினைவாக வேலூரில் இயங்கிவரும் மகிழ்நன் தமிழ்க் கழகத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவுவிழா புலவர் சி. கங்கா தரன் அவர்கள் தலைமையில் கடந்த 28-9-75இல் வேலூர் மெரினா கபே திரு. வி. கே. விநாயக முதலியார் கலியாண மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

# மதிப்புரை

## புனித நெறி

[ஆசிரியர்: தவத்திரு. குன்றக்குடி அடிகளார், எம்.எல்.சி, வெளியீடு: கல்யாணி புத்தகாலயம், சென்னை-17. விலை ரூ. 3-50]

உலகில் எத்தனையோ நெறிகள் உள்ளன. அவை அனைத்தும் மனித வாழ்வைச் செம்மைப்படுத்தத் தோன்றியனவே. எனினும் நடைமுறையில் இற்றைநாள் உலகெங்கணும் அமைதியின்மை நிலவக் காண்கிறோம். அவாவினால் மனிதன் தானும் அல்லற்பட்டுப் பிறரையும் அல்லற்படுத்துகிறான். இதற்கு மருந்து யாது? உலகில் அமைதி நிலவக் காண்டல் எப்படி-எப்போது? என்னும் இப்படிப்பட்ட வினாக்களுக்கு விடையளிக்கும் முறையில் அமைந்துள்ளது இப் 'புனிதநெறி.' இதன்கண் 34 கட்டுரைகள் உள்ளன. அனைத்தும் படித்துப் பயன் காணத்தக்க பட்டறிவு நிறைந்த கட்டுரைகள்.

## தடைகளும் விடைகளும் (இரண்டாம் பகுதி)

ஆசிரியர் முரு. பழ. இரத்தினஞ் செட்டியார். வெளியீடு: மறைமலையடிகள் மன்றம், புன்செய் புளியம்பட்டி-கோவை மாவட்டம். விலை: ரூ 6-25.

இந்நூல் சமயத் தொடர்பான பகுத்தறிவு வினாக்களுக்கு விடைகள் அளிக்கின்றது. சமயநூல்கள் நெறிகள், சடங்குகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் பகுத்தறிவுக்கு ஏற்பன எவை? ஏலாதன எவை? மூடக்கொள்கைகள் எவை என்பனவற்றைப் பகுத்துக் கூறுகிறது. மறை. திருநாவுக்கரசு, புலவர் ப. சு. மணியம், பேராசிரியர் வை. இரத்தினசபாபதி ஆகிய தமிழறிஞர்களின் மதிப்புரைகளுடன் கூடிய சிறந்த நூல்.

## வேளாண்மையும் பண்பாடும்

[ஆசிரியர்: இல. செ. கந்தசாமி, எம். ஏ., வெளியீடு: தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோயமுத்தூர் விலை ரூ. 6-00

வேளாண்மை தமிழ் நாட்டின் மிகப் பழைமையான தொழில். இதன் அடிப்படையில்தான் தமிழகத்தின் சிறப்பு, தமிழரின் பண்பாடு, கலை, நாகரிகம், இன்னபிற வளர்ந்துள்ளன. தமிழ் இலக்கியங்களிலும் வேளாண்மையின் சிறப்பும், அதனால் விளைந்த பண்பாடுகளும் பேசப்படுகின்றன. அவற்றையெல்லாம் துருவி ஆய்ந்து இந்நூலினை உருவாக்கியுள்ளார் இந்நூலாசிரியர். சங்க இலக்கியத்தினின்றும் பிற்கால இலக்கியங்களினின்றும் மேற்கோள்கள் பல எடுத்துக்காட்டி வேளாண்மைக்கும் பண்பாட்டிற்கும் உள்ள தொடர்பினை விளக்கும் இந்நூலாசிரியர் திறம் பெரிதும் பாராட்டத்தக்கது. இலக்கிய ஆய்வாளர் அனைவரும் படித்துப் பயன்பெறத்தக்க அரிய தொகுப்பு.

குறிப்பு: இம் மூன்று நூல்களும் சென்னையிலுள்ள கழகத் தலைமை நிலையத்திலும், நெல்லை, மதுரை, கோவை, குடந்தை, திருச்சி ஆகிய ஊர்களிலுள்ள கிளை நிலையங்களிலும் கிடைக்கப் பெறும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**ரப்பர் கதை** —என். கே. வேலன், பி.ஏ.

ரப்பரைப் பலவகையில் எல்லாரும் பயன்படுத்துகின்றனர். இன்றைய உலகநாகரிகத்திற்கு ரப்பரும் ஒரு காரணம் என்ருல் மிகையாகாது. ஆனுல், இந்த ரப்பர் எப்படி உண்டாகிறது. ரப்பர் தொழில் எப்படியெல்லாம் வளர்ந்திருக்கிறது. என்பனவற்றையெல்லாம் நம்மில் பலர் அறியார். அத்தகைய அறியாமை நீங்கி அறிவியல் அறிவு வளர எல்லாரும் இதைப் படிக்க வேண்டும். பள்ளி மாணவர் படித்தறியும் வண்ணம் இனிய எளிய தமிழில் எழுதப் பெற்றுள்ளது. ரூ. 3-00

**இளைஞர்க்கான புத்தமதக் கதைகள்** —மயிலை சீனிவேங்கடசாமி

ஒவ்வொரு மதங்களிலும் அறவுரைகளும் அறிவுரைகளும் கூறும் கதை நூல்கள் உண்டு. அதுபோலவே புத்தமதக் கொள்கைகளைக் கற்பிக்கும் சில அரிய கதைகள் இளைஞர்கள் படித்துச் சுவையும் பயனும் காணும் வண்ணம் இதில் கூறப்பட்டுள்ளன. ரூ. 2-00

**சமண சமயக் கதைகள்** —சிவ ஆதிநாதன்

இதில் சமணசமய நீதிகளை உள்ளடக்கி 12 கதைகள் கூறப்பட்டுள்ளன. பல சமயநீதிகளையும் இளைஞர்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்னும் நோக்கத்துடன் வெளி வந்துள்ள சமயக் கதைகளுள் இதுவும் ஒன்று. ரூ. 2-25

## கண் மருத்துவம் (Care of Iyes)

*ஆசிரியர் :* டாக்டர் செ. பா. சுப்பிரமணியன்
பி.எஸ்ஸி., எம்.பி., பி.எஸ்., எம்.எஸ்.

'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' என்பது ஆன்ருேர் வாக்கு. கண் இன்றேல் காட்சி இல்லை. காட்சி இன்றேல் அறிவு விளக்கம் இல்லை. அறிவு விளக்கமின்றேல் வாழ்க்கையின் பயன் ஏதுமில்லை. எனவே, கண்ணைப் பாதுகாக்க வேண்டுவது ஒவ்வொருவரின் இன்றியமையாக் கடமையாகும். அதனைச் செய்வது எப்படி? இவ் வினுவிற்கு விடை கூறு முறையில் அமைந்துள்ளது இந்நூல். இதில் கண்ணின் சிறப்பு, அதன் அமைப்பு, அஃது இயங்கும் முறை, கண்ணுக்கு வரும் நோய்கள், அவற்றைத் தீர்க்கும் முறைகள், கண்பாதுகாப்பு இன்னபிற செய்திகள் இனிய எளிய தமிழில் கூறப்பட்டுள்ளன. கண் மருத்துவ வல்லுநர் டாக்டர் ஆபிரகாம் அவர்களின் அணிந்துரையுடன் கூடியது. எல்லா நூலகங்களிலும் இந்நூல் இடம் பெறுமாயின் பொதுமக்களைக் கண் பற்றிய நோயினின்று காத்தல் எளிதாகும். விளக்கப் படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. விலை ரூ. 5-00

பதிவு எண் : M. 4899

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| எங்கே செல்கிறோம் | கோவை அ. அய்யாமுத்து | 5 | 00 |
| சுதந்தரத்திற்கு முன்னும் பின்னும் | ,, | 8 | 00 |
| கல்வித்துறை உருப்பட | இராசநாயகம்-அறவாணன் | 6 | 00 |
| சிலநாடுகளில் சிலநாட்கள் | செ. மாதவன் | 5 | 00 |
| நாவல் வளம் | டாக்டர் இரா. தண்டாயுதம் | 9 | 00 |
| திராவிடமொழி ஒப்பியல் | டாக்டர் நா. செயராமன் | 5 | 50 |
| ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம் | கதிர் மகாதேவன் | 10 | 00 |
| அன்புமிகுந்த மதம் | அ. வெ. சுப்பிரமணியன் | 10 | 00 |
| சிதறிய பூக்கள் | சி. ஆர். ராசம்மா | 7 | 50 |
| நான் விமர்சிக்கிறேன் | வலம்புரி ஜான் எம்.பி. | 2 | 00 |
| மு. வ. வின் இலக்கியங்கள் | டாக்டர் இரா. தண்டாயுதம் | 8 | 00 |
| சமுதாய நோக்கில் பழமொழிகள் | டாக்டர் சாலை இளந்திரையன் | 10 | 00 |
| ஆய்வுக்கோவை தொகுதி 1 | (இந்தியப் பல்கலைக் கழகத்--தமிழாசிரியர் மன்றம் | 18 | 00 |
| ,, ,, தொகுதி 2 | -ஏழாவது கருத்தரங்கு) | 18 | 00 |
| தமிழ்மொழி வரலாறும் ஒப்பிலக்கணமும் | இரா. அரங்கசாமி | 12 | 50 |
| பனித்துளிகள் | முருகுசுந்தரம் | 6 | 00 |
| கலிங்கத்துப்பரணி திறனாய்வு | ம. பொ. சிவஞானம் | 6 | 00 |
| History of Madurai | Dr. K. Rajayyan | 27 | 00 |
| இராமாயணம் | இராஜாஜி | 7 | 00 |
| மகாபாரதம் | ,, | 7 | 00 |
| பாரதியார் கவிதைகள் | ,, | 7 | 00 |
| பஞ்ச தந்திரக் கதைகள் முதற்பகுதி | அ. லெ. நடராஜன் | 7 | 50 |
| ,, இரண்டாம் பகுதி | ,, | 9 | 00 |
| வள்ளுவர் வகுத்த பொருளியல் | டாக்டர் தி. முருகரத்தினம் | 7 | 50 |
| தொல்காப்பியம்-அகத்திணை இயல் உரை வளம் | மு. அருணாசலம் பிள்ளை | 18 | 00 |
| பரணர் | டாக்டர் ந. சுப்பிரமணியன் | 8 | 50 |
| இரு விழிகள் | பண்டிதரத்ந என். ஏ. வேலாயுதம் | 15 | 00 |
| வேள்வித் தீ | எம். வி. வெங்கட்ராம் | 6 | 00 |
| இருளும் ஒளியும் | ,, | 5 | 00 |

அப்பர் அச்சகம், சென்னை - 1.